# நர்சரிக் கல்வியும் வளர்ச்சிக்குரிய பணிகளும்

தா. பத்மனுபன் பி.காம்., எம்.பி.ஏ.,
எப். ஏ. ஜி. இ.,

ப. நடராஜன் எம்.ஏ., பிஎச்.டி.,



திர் வெளியீடு



ஆசிரியர்பற்றி—

**தா. பத்மனாபன்**

அவர்கள் கோவையில் பிறந்தவர். இளமையிலிருந்தே காந்தியத்திலும், சமூகத் தொண்டிலும் ஈடுபாடு கொண்ட இவர், பி. காம்., எம். பி. ஏ., ஆகிய பட்டங்களை முறையே 1974, 1976ஆம் ஆண்டுகளில் பெற்றார். தற்போது நிர்வாகவியல் துறையில் பிஎச்.டி. பட்டத்திற்காக ஆராய்ச்சி செய்து வருகிறார்.

மற்றும்மாவட்ட சிறுதொழில்கள் சங்கம், கோவை நிர்வாகத்திறன் கழகம், மாவட்ட நுகர்வோர் கவுன்சில், சென்னை நிர்வாகவியல் கல்வி நிறுவனம் போன்ற பல்வேறு நிறுவனங்களில் பொறுப்புக்களை ஏற்றுத் தொழில் மற்றும் சமுதாய வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகிறார். ஸ்ரீ ரங்கவிலாஸ் ஜின்னிங்&ஆயில் மில்ஸ், டி.பி.வி. இண்டஸ்ட்ரீஸ், கலைக்கதிர் அச்சகம் ஆகியவைகளின் நிர்வாகப் பங்குதாரராகவும் பணிபுரிந்து வருகிறார்.

தவிரவும் பி. எஸ். ஜி. காந்தி கிராமப்பணி நிலையத்தின் இணைப்பு நெறியாளராகவும், பெருமாநல்லூர் விவேகானந்தர் நற்பணி மன்றத்தின் கௌரவத் தலைவராகவும் இருந்து பல்வேறு சமூகத் தொண்டுகள் புரிந்து வருகிறார்.

மேலும் பி.எஸ்.ஜி. தொழிலகம், பவுண்டரிப் பிரிவு ஆகியவற்றின் செயலாளராகவும் இருந்து நற்பணியாற்றி வருகின்றார். 'கலைக்கதிர்', 'தொழில் இந்தியா' போன்ற அறிவியல், தொழில்நுட்ப ஏடுகளின் ஆசிரியர் குழுவில் உறுப்பினராகப் பணியாற்றி வருகிறார்.

# நர்சரிக் கல்வியும் வளர்ச்சிக்குரிய பணிகளும்



தா. பத்மநாபன்
பி.காம்., எம்.பி.ஏ., எப்.ஏ.ஜி.இ.,

ப. நடராஜன்
எம்.ஏ., பிஎச்.டி.,

நிர்வாகவியல் துறை
பி.எஸ்.ஜி. பொறியியல் கல்லூரி
கோயமுத்தூர் - 641 004



கலைக்கதிர் வெளியீடு
கோவை 641 004

செ. அரங்கநாயகம், எம்.ஏ., பி.டி., பி.எல்., கோட்டை

கல்வி அமைச்சர் சென்னை-600009

# அணிந்துரை

நர்சரிக்கல்வியும் வளர்ச்சிக்குரிய பணிகளும் என்னும் இந்நூல் தமிழுலகில் வரவேற்கத்தக்க ஒன்றாகும். உயர்கல்விபற்றி எண்ணிறந்த நூல்கள் வெளிவந்திருப்பினும், அடிப்படைக் கல்வி பற்றிய நூல்கள், விரல்விட்டெண்ணும் நிலையில்தான் உள்ளன. அதிலும் தமிழில் வெளிவந்துள்ள நூல்கள் மிகச்சிலவே.

இன்றைய நிலையில் அனைத்து நர்சரிப் பள்ளிகளிலும் ஆங்கிலமே பயிற்றுமொழியாக உள்ளது. தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்டு நர்சரிப் பள்ளிகள் இயங்கமுடியாது என்று ஒரு தவறான கருத்து நிலவிவரும் இந்த நேரத்தில் நர்சரிக்கல்வியை எப்படி நடத்துவது என்பதுபற்றித் தமிழில் இத்தகையதொரு நூல் வெளி வந்துள்ளது மிகவும் பாராட்டுதற்குரியது.

இந்நூலில் ஒன்பது ஆராய்ச்சிக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. முதற்பகுதியில் நர்சரிக்கல்வியின் அடிப்படைபற்றியும், நர்சரிக் கல்வி எவ்வாறு அமையவேண்டும் என்பதுபற்றியும் இந்நூல் ஆசிரியர்கள் மிக அழகாகவும் எளிமையாகவும் விளக்கியுள் ளார்கள். குழந்தைகளைப் பள்ளிக்கனுப்பச் சரியான வயது எது என்பதுபற்றிய சர்ச்சை சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.

இரண்டாம் பகுதியில் இளமைப்பருவம் பற்றியும், அப் பருவத்தில் இளையோரிடமிருந்து சமுதாயம் என்ன எதிர்பார்க்கிறது, சமுதா யத்திடமிருந்து இளையோர் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்பன போன்ற கருத்துக்கள் நடைமுறைக்கேற்ற வகையில் விவரிக்கப்பட் டுள்ளன. மற்றும் ஆக்கத்திறன், தன்னம்பிக்கை, ஆளுமை ஆகிய திறன்களை நம் இளைஞர்களிடையே வளர்க்கும் முறைபற்றியும் ஆங்காங்கே விளக்கப்பட்டுள்ளது.

மிகக் கடினமான கருத்துக்களையும், மிக எளிய முறையில், அதே நேரத்தில் ஆராய்ச்சின் முடிவுகளை அடிப்படையாகக்கொண்டு விளக்கியுள்ள நயம் போற்றுதற்குரியது. அடிப்படைக் கல்வியில் பெரியதொரு மாற்றம் தேவை என்பதை மத்திய அரசும், மாநில அரசும் பெரிதும் உணர்ந்துள்ள இந்த நேரத்தில் அடிப்படைக் கல்விபற்றிய பல புதுக்கருத்துக்கள் அடங்கிய இந்நூல் மிகவும் வரவேற்கத்தக்க ஒன்ருகும். கல்வியாளர்களுக்கும், ஆசிரியப் பெருமக்களுக்கும், பெற்ரேருக்கும் இந்நூல் பலவகையிலும் உதவும் என்று நம்புகிறேன். இந் நூலாசிரியர்கள் திரு தா. பத்மனுபன். பி.காம்., எம்.பி.ஏ., எப்.ஏ.ஜி.இ., டாக்டர் ப. நடராஜன் எம்.ஏ., பி.எச்டி., ஆகியோரை உளமாரப் பாராட்டுகிறேன். இன்னேரன்ன முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு இன்னும் பல நூல்களை ஆக்கித் தமிழுலகிற்கு நல்குவார்கள் என்று நம்புகிறேன்.

முகாம் ;
கோவை
*21—1—1978*

**செ. அரங்கநாயகம்**

# முன்னுரை

●

நர்சரிக் கல்வியும் வளர்ச்சிக்குரிய பணிகளும் எனும் இந்நூல் ஒன்பது ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இந்நூல் இரண்டு பிரிவுகளாக அமைந்துள்ளது. முதற் பகுதியில் நர்சரிக் கல்விபற்றிய ஐந்து கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இக்கட்டுரைகள் நர்சரிக் கல்வியின் இன்றியமையாமை பற்றியும், நர்சரிக் கல்வியின் நடைமுறைப் பிரச்சினைகள் பற்றியும் விவாதிக்கின்றன. இரண்டாம் பகுதியில் இளமைப் பருவம் பற்றிய நான்கு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன· இதில் வளர்ச்சிக்குரிய பணிகள் பற்றிய ஒரு கட்டுரையும் இடம் பெற்றுள்ளது. அடுத்து ஆக்கத் திறனை வளர்ப்பது பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

இந்நூலில் காணப்படும் கட்டுரைகளில் பல, ''கலைக்கதிர்'', ''மேம்பாலம்'' ஆகிய மாத இதழ்களில் வந்தவைகளாகும். மீண்டும் அவைகளைத் தொகுத்து வெளியிட்டதற்குச் சில காரணங்கள் உண்டு. அவைகளை விளக்க முற்படுகிறோம்.

முதலாவதாக இக்கட்டுரைகள் அனைத்துமே நம் சொந்த வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டனவாக நாங்கள் உணர்கிறோம். இது எவ்வகையிலும் பிறருக்கு அறிவுரை கூறுவதற்காக எழுதப்பட்ட நூல் அல்ல; ஆனால் இக்கட்டுரைகளைப் படித்த பலர், இவைகளில் பல புதிய கருத்துக்கள் இருப்பதாகவும், இவைகள் மீண்டும்

ஆராய்வதற்குரிய கருத்துக்கள் என்பதைக் கூறக் கேட்டோம். எனவே இவை அனைவருக்கும் குறிப்பாகப் பொது மக்களுக்குக் கிடைக்கும் வண்ணம் செய்யவே இம் முயற்சியை மேற்கொண்டோம்.

அடுத்து எங்கள் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட சிலர், இக்கட்டுரைகளைத் தொகுத்து ஒரு நூலாக வெளியிடும்படி நீண்ட நாட்களாக வற்புறுத்தி வந்தார்கள். எந்த ஒரு ஆசிரியருக்கும் இது பொய்யான வேண்டுகோள்தான். ஆனால் எங்களைப் பொறுத்தவரை ஒரு கடமையுணர்ச்சியை நிறைவேற்றியதாகவே நினைக்கிறோம்.

இந்த வகையில் இந்நூல் சமூக சேவகர்களுக்கும், ஆசிரியர்களுக்கும், பெற்றோர்க்கும், கல்வியாளர்களுக்கும், உளவியலாருக்கும் ஏதாவது ஒரு வகையிலாவது உதவும் என்று நம்புகிறோம்.

மூன்றாவதாக, இந்நூல் எழுத ஒரு முக்கிய காரணம் உண்டு. அதாவது இன்றைய சிறுவர், சிறுமியர் எதிர்காலத்தைத் திறம்படச் சமாளிக்க, ஆரம்பக் கல்வியிலும் ஆளுமை வளர்ச்சியிலும் நாம் அக்கறை காட்ட வேண்டிய ஒரு சமூகத் தேவை இன்று ஏற்பட்டுள்ளதை நாங்கள் உணர்கிறோம். ஆனால் அதே நேரத்தில், நாம் ஆராய்ச்சியின் வாயிலாகக் கண்ட பல அரிய கருத்துக்களை நடைமுறையில் செயல்படுத்துவதில்லை என்பதை நினைத்து வேதனைப்படாமல் இருக்கமுடியவில்லை. இன்னோரன்ன புதுக் கருத்துக்களைக் கல்வியிலும், நம் வாழ்க்கையிலும் புகுத்துவதன் மூலம் பல்வேறு சமூகப் பிரச்சினைகளுக்கு எளிதில் தீர்வு காணலாம்; ஒரு சிறந்த சமுதாயத்தையும் படைக்கலாம்.

இதில் காணப்படும் கட்டுரைகள் கடந்த சில ஆண்டுகளாக நாங்கள் மேற்கொண்ட ஆராய்ச்சியினாலும், அனுபவத்தினாலும் பிறந்தவை. இக் கட்டுரைகள் தனித்தனியே எழுதப்பட்டமையால் ஒவ்வொன்றுக்கும் நெருங்கிய தொடர்பு இல்லாமலிருக்கலாம். அறிஞர் உலகம் இக் குறையைப் பொறுத்தருள வேண்டுகிறோம். சொல்லப்போனால், இந்நூல் எழுதியதன் நோக்கம் எங்கள் அனுபவத்தில் சிலவற்றை உங்களுடன் பகிர்ந்து கொள்வதே.

இத்துறையில் எங்களை ஊக்குவித்த ஆக்கச் சிந்தனையாளர் பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களுக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம்.

தா. பத்மனாபன்
ப. நடராஜன்

**கோயமுத்தூர்**
அக்டோபர், 1977



# பொருளடக்கம்

## பகுதி ஒன்று



## பகுதி இரண்டு



# விளையும் பயிர் முளையிலே

மனிதத் திறமைகளின் தீவிர வளர்ச்சி 8 முதல் 18 மாதங்களில் அமைந்திருப்பதாக ஆய்வுகள் காட்டுகின்றன. மேற்கூறிய ஆரம்பப் பகுதியில் குழந்தையானது பெறும் அனுபவம் எப்படி அமைகிறது என்பதைப் பொறுத்துத்தான் அதன் எதிர்காலமே அமைகிறது. ஒரு குழந்தையின் பள்ளி வாழ்க்கையில் ஏற்படும் வெற்றி அல்லது தோல்வி, அது முதல் படிவத்திற்கு வருமுன்னரே முடிவு செய்யப்படுகிறது. ஹார்வார்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் வொயிட்டும் (White) மற்றும் 20-க்கும் மேற்பட்ட உளவியல் வல்லுநர்களும் சுமார் 6 ஆண்டுகள் தொடர்ச்சியாக 100-க்கும் மேற்பட்ட குழந்தைகளை இல்லங்களிலும், நர்சரிப்பள்ளிகளிலும், கிண்டர் கார்டன்களிலும் ஆராய்ந்தனர்.

அவர்களின் ஆராய்ச்சி பல அரிய உண்மைகளை வெளிப்படுத்தியது. ஆறு வயதில் மிகச்சிறந்த திறமைசாலியாக விளங்கிய குழந்தைகளிடம் கீழ்க்காணும் நடத்தைகள்

காணப்பட்டன. அதாவது அக் குழந்தைகள், பிரச்சினைகளைத் தீர்ப்பதில் (Problem solving) வல்லவர்களாக விளங்கினார்கள். அவர்களிடம் மொழிப்புலமை அதிகமாக இருந்தது; அவர்கள் தலைவர்களாகவும், அதே நேரத்தில் பின்பற்றுபவர்களாகவும் விளங்கினார்கள். மிகையான அளவுக்குச் சமூக உணர்வு நிரம்பியவர்களாக இருந்தார்கள். பெரியவர்களைத் தங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்வதில் நல்ல புலமை தென்பட்டது; பிற குழந்தைகளுடன் கற்பனை விளையாட்டு மிகையாகக் காணப்பட்டது.

ஓராண்டிலோ அல்லது மூன்றாண்டிலோ கற்றலில் பின் தங்கிய குழந்தையைப் பிற்காலத்தில் உயர்ந்ததொரு நிலைக்குக் கொண்டுவருவது மிகவும் இயலாததாகும். அதாவது ஓராண்டுக்கும் மூன்றாண்டுக்கும் இடையில் ஏதோ ஒரு தீவிர ஆற்றல் வெளிப்படுகிறது. அது தொடர்ந்து நீடிக்கின்றது. ஒரு தனியனின் எதிர்காலம் அதைப் பொறுத்தே அமைகிறது. குழந்தையின் வளர்ச்சியில் தாய் ஒரு முக்கிய பங்கு வகிக்கிறாள். மற்றும் குழந்தையின் மொழி, நுண்ணறிவு சமூகத் திறமைகள் ஆகியவைகளை வளர்ப்பதில் கீழ்க்காணும் அனுபவங்கள் குழந்தைகளுக்கு மிகையாகக் கிட்டவேண்டும். குழந்தைகளிடம் நேராகப் பேசுவது, நேர்முகமான எதிர் வினைகள் செய்வது வேண்டற்பாலதாகும். ரேடியோ, டெலிவிஷன் போன்றவைகள் நேரடிப்பேச்சு அல்ல. பெற்றோர் குழந்தைகளை நீண்ட நேரம் பார்த்தல் நன்மை பயக்கும். வீட்டில் எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் ஒவ்வொரு பொருளையும் என்ன ஏது என்று தெரிந்துகொள்ளக் குழந்தைகளை அனுமதித்தல் அதன் வளர்ச்சியையும் ஆக்கச் சிந்தனையையும் (Creative Thinking) வலுப்படுத்துகிறது.

சிறந்த குழந்தைகளாக விளங்கியவர்களின் பின்னணியைப் பார்த்தால் அவர்களுக்குச் சிறந்த சமூக அனுபவங்கள் கிடைத்துள்ளன என்று தெரிகிறது. ஒரு குழந்தைக்கு நல்ல உள்ளத்தைத் தரவேண்டுமானால் 8 முதல்

18 மாதம் வரை நல்லதொரு சமூக வாழ்வை அமைத்துத் தரவேண்டும்.

**மிகச்சிறந்த பெற்றோர் யார்?**

1. தங்களுடைய குழந்தைகளுக்குச் சிறந்ததோர் சூழ்நிலையை அமைத்துத் தருபவர்கள்.

2. தங்களுடைய குழந்தைகளிடம் ஒழுங்கை (Discipline) எதிர்பார்ப்பதுடன், மிகுந்த அன்பும் காட்டுபவர்கள்.

3. குழந்தைகளுக்குத் தனி அறிவுரை வழங்கி யோசனை கூறுபவர்களாக (Personal Consultant) இருப்பவர்கள்.

குழந்தைகளின் நடத்தையில் அல்லது ஆளுமையில் மாற்றத்தை உண்டாக்க வேண்டுமானல் அதை இல்லத்திலேயே துவக்க வேண்டும். 'விளையும் பயிர் முளையிலே', 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்பன போன்ற பழமொழிகள் இக் கருத்தை வலியுறுத்துகின்றன.



## 2

# நர்சரிக்கல்வி - ஓர் அறிமுகம்

இன்றைய குழந்தைகளே இருபதாம், இருபத்தொன்றும் நூற்ருண்டின் குடிமக்கள். எனவே, சமூகம் அவர்களுக்காக என்ன செய்துள்ளது? நாம் அவர்களுக்காக என்ன செய்யப் போகிருேம்? இந்தக் கேள்விகளுக்கு விடை காண வேண்டும்.

குழந்தைகளை உருவாக்குவதில் பெற்ருேரின் பங்கும், கல்வி அறிஞர்களின் பங்கும் இங்கே குறிப்பிடத் தக்கது. பள்ளி செல்லும் முன் குழந்தைகள் கல்வி எப்படி இருக்க வேண்டும் என்பது இன்றுள்ள பிரச்சினை.

இன்றைய உலகம் இராக்கெட் உலகம்; கம்ப்யூட்டர்களின் உலகம். சென்ற நூற்ருண்டில் குழந்தை, நிலவைப் பார்த்து, ''அது என்ன?'' என்று கேட்டபோது தாய், ''அதுதான் நிலா! அங்கே பாட்டி நூல் நூற்கின்ருள்!'' என்ருள்.

இன்றோ அதே வயதில் உள்ள குழந்தை அம்மாவைப் பார்த்து ''ஆம்ஸ்ட்ராங் யாரம்மா! 'அப்போலோ' எங்கே?'' என்று கேட்கின்றது.

இந்த நிலையில் நாளுக்கு நாள் வளர்ந்து வரும் அறிவியல் உலகத்துக்குத் தக்கவாறு நாம் குழந்தைகளைத் தயார் செய்யாவிட்டால், எதிர்காலத்தில் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகும் நிலை ஏற்படலாம். நம்மில் பலர் இன்றும் இன்றைய சமுதாய, அறிவியல் மாற்றங்களைச் சமாளிக்க முடியாமல் இடர்ப்படுவதைக் காண்கின்றோம். இன்னோரன்ன பிரச்சினைகளைத் தீர்க்க குழந்தைகளை எவ்வகையில் உருவாக்க வேண்டும் என்பதைக் கவனிப்போம்.

குழந்தைகளை உருவாக்குவதில் நர்சரிப் பள்ளிகள் (Nursery School) பெரும் பங்கு வகிக்கின்றன. நம் நாட்டில் நர்சரிப் பள்ளிகளின் எண்ணிக்கையை அதிகரிக்கவேண்டும். நர்சரிப் பள்ளிகள் என்று இங்குக் குறிப்பிடுவது தற்போது இருக்கும் நர்சரிப் பள்ளிகளை அல்ல; சொல்லப் போனால் தற்போது இருக்கும் நர்சரிப் பள்ளிகளால் குழந்தைகளுக்கு ஏற்படும் நன்மையைவிடத் தீமைகளே அதிகம். நர்சரி செல்லும் குழந்தைகள் நான்கு வார்த்தைகள் ஆங்கிலத்தில் பேசி விட்டால், பெற்றோர் பூரித்துப் புளகாங்கிதம் அடைகிறார்கள். 'Twinkle, Twinkle little Star'. 'Ba Ba Black Sheep' போன்ற பாட்டுக்களைப் பாடுவதைச் சிறந்த கல்வி முறையாக நினைக்கிறார்கள். மதிப்பெண் அட்டையைப் பார்த்தவுடன், குழந்தையின் பெயரைக்கூடப் பார்க்காமல் அதன் தரத்தைப் (Rank) பார்க்க முற்படுகிறார்கள். என்ன கொடுமை! இதுதான் கல்வியா? இதை உணர்ந்த நர்சரிப் பள்ளிகள் குழந்தைகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதை விட்டு விட்டு, பெற்றோர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய ஆரம்பித்து விட்டன.

இளம் குழந்தைகளை (அதாவது பிறந்தது முதல்) நர்சரியில் சேர்க்கலாமா? சேர்ப்பது நல்லதா? அல்லது

வீட்டில் வளர்ப்பதுதான் நல்லதா? என்பன பெரும் விவாதத்திற்குரிய பொருள்களாக இருந்து வருகின்றன. சில ஆராய்ச்சியாளர்கள் நர்சரியில் சேர்ப்பது தவறு என்கிருர்கள். சிலர் நர்சரியில் சேர்ப்பதுதான் குழந்தைகளின் எதிர் காலத்திற்கு நல்லது என்கிருர்கள்.

அமெரிக்கா, இரசியா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் ஆய்வுகள் நடத்திஞர்கள். அவர்களுடைய முடிவுகளின்படி நர்சரியில் வளர்க்கப்பட்ட குழந்தைகளின் மன வளர்ச்சி, மிகச் சிறந்த வீட்டில் வளர்க்கப்பட்ட குழந்தைகளின் மனவளர்ச்சியைவிட அதிகமாக இருப்பதைக் கண்டார்கள். உலக மகாயுத்தத்தின்போது குழந்தைகள் ஆய்வு நிலையத்தில் நடந்த ஆராய்ச்சிகளும் இந்தக் கருத்தையே வலியுறுத்துகின்றன. பேராசிரியர் நிக்கோலாய், ஸ்கிலோனேவ் போன்றவர்கள் கூறிய ''குழந்தை பிறந்த முதல் நாள் முதல் அதன் கல்வி பற்றிய திட்டங்களைத் தீட்ட வேண்டும்'' என்ற கருத்து, குழந்தை ஆராய்ச்சியாளர்களிடையேயும், கல்வி நிறுவனங்களிடையேயும் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கியுள்ளது.

பொதுவாக, நர்சரியின் நடைமுறைகள் ஆராய்ச்சியின் முடிவுகளைச் சார்ந்ததாக இருக்க வேண்டும். நர்சரி ஆசிரியர்களுக்குக் குழந்தை உளவியல், குழந்தை உடலியல் ஆகியவற்றில் மிகுந்த அறிவு தேவை. குழந்தைகளால் எவற்றைச் செய்ய இயலும், எவற்றைச் செய்ய இயலாது என்பனவற்றையும் மற்றும் குழந்தைகளுக்கிடையே உள்ள தனியாள் வேறுபாடுகள் எவை என்பது பற்றியும் ஆசிரியர்கள் உணர்ந்திருக்க வேண்டும். நர்சரிப் பள்ளியின் ஆசிரியைக்குக் குழந்தைகளின் கற்றல், பேச்சு, மொழி வளர்ச்சி பற்றிய விவரங்கள் நன்கு தெரிந்திருக்க வேண்டும். அவர்களுக்கென்று தனியாகப் பயிற்சிக் கல்லூரிகள் இருக்க வேண்டும். அதில் பயிற்சி பெற்றவர்கள்தான், நர்சரிப் பள்ளிகளில் ஆசிரியைகளாகப் பணிபுரிய வேண்டும். குழந்தை மருத்துவம், குழந்தை உணவு, குழந்தைகளின் உடை,

குழந்தை விளையாட்டுக்கள் ஆகியவைபற்றிக் கருத்தரங்குகள் நடத்த வேண்டும். அவ்வப்போது குழந்தைகளின் நடத்தைகளைப் பற்றிய சினிமாப் படங்கள் காட்டப்பட வேண்டும்.

நர்சரிப் பள்ளியும் குடும்பமும் இணைந்து செயல்படுமானல் மிகச் சிறந்த ஓர் எதிர்காலச் சமுதாயத்தை உருவாக்க இயலும். ஆரோக்கியமான குழந்தைகளை நர்சரியில் உருவாக்கலாம். ஏன் வீட்டை விடவா அவை ஆரோக்கியமானவை என்று நீங்கள் கேட்கலாம். இதைச் சற்று ஆராய்வோம்.

இன்று பெரும்பாலான குடும்பங்களில் கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் செல்பவர்களாக உள்ளார்கள். தற்காலத்தில் பாட்டி, பாட்டன் ஆகியோர்கூடத் தங்களுக்கென்று ஒரு வேலையை அமைத்துக்கொண்டு அதில் ஈடுபட ஆரம்பித்து விட்டார்கள். எனவே, வயிற்றுப் பிழைப்பிற்காக வந்த ஆயாக்கள் அந்தப் புனிதப் பொறுப்பை ஏற்றுள்ளார்கள். இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளில் எதிர்காலத்தில் பெரும்பாலும் ஆண், பெண் இரு பாலரும் சம்பாதிக்க வேண்டிய நிலை ஏற்படும் என்பதை ஒருவரும் மறுக்க இயலாது. இந்த நிலையில் குழந்தையை என்ன செய்வது? அப்படியே சமாளித்து, வீட்டில் வைத்திருந்தாலும் அதன் உயிரியல், சமூகத் தேவைகள் பூர்த்தியாகுமா? கணவன் காலை எழுந்தது முதல் இரவுவரை வேலையில் ஈடுபட்டு இருப்பார். குடும்பம் பெரிதாக இருந்தால் பாவம் கடைசி இரண்டு, மூன்று குழந்தைகளின் பெயர்கூடத் தெரியாது. வேலைக்குச் செல்லும் மனைவியோ அதைவிட மிகுதியாக வேலையில் ஈடுபட்டு இருப்பார். இறுதியில் குழந்தை புறக்கணிக்கப்பட்ட பொருளாகிவிடும். இன்று இவ்வளவு மோசமான ஒரு நிலைமை இல்லாவிடினும், அடுத்த சில ஆண்டுகளில் இந்த நிலைமை ஏற்படும் என்பதை ஒருவரும் மறுக்க இயலாது.

இந்த நிலையில் நர்சரிக்கல்வி கட்டாயமாகத் தேவைப்படும். அவ்வாறு நர்சரிகள் அமைக்கப்படும்போது அவை,

குழந்தைகளின் உடலியல், உளவியல் தேவைகளைப் பூர்த்தி செய்பவையாக அமையவேண்டும். வேளாவேளைக்குச் சத்துள்ள உணவு, அளவான தூக்கம், வயதுக்குத் தகுந்த நல்ல விளையாட்டு போன்ற குழந்தைகளின் தனிப்பட்ட தேவைகளும் கவனித்துக் கொள்ளப்படும் வகையில் நர்சரிப் பள்ளிகள் அமையவேண்டும். பிறந்தது முதல் ஓர் ஆண்டு வரை ஒவ்வொரு நான்கு மணி நேரத்திற்கு ஒரு முறை உணவு கொடுக்கப்பட வேண்டும். ஒன்பது மாதங்கள் வரை உள்ள குழந்தைகள் நன்கு தூங்கும்; அதுவும் விட்டு விட்டு மூன்று அல்லது நான்கு முறை தூங்கும். அவ்வப்போது அதற்கான வசதிகள் செய்யப்பட வேண்டும். மருத்துவப் பரிசோதனை மிகவும் அவசியம்.

முதல் ஆண்டிலேயே உடற் பயிற்சிகளை ஆரம்பிக்க வகைசெய்ய வேண்டும். எப்படி நடப்பது, எப்படிச் சரியாக நிற்பது. என்பன போன்றவை கற்பிக்கப்பட வேண்டும். குழந்தைகள் சேர்ந்து இருப்பதால் மகிழ்வாக இருக்கின்றன. இரண்டு மூன்று ஆண்டுகள் கழித்து இன்னும் கடினமான புதுப் புது உடற்பயிற்சிகளைத் தானாகவே செய்ய முற்படுகின்றன. குழந்தைகளின் எதிர்கால வாழ்வுக்கும், தேச ஆரோக்கியத் திற்கும் உடற்பயிற்சிகள் எவ்வளவு இன்றியமையாதவை என்பதை அனைவரும் அறிவர். சின்னஞ் சிறு வயதிலேயே இன்னோரன்ன நல்ல பழக்கங்களை அமைத்துக் கொடுத்தால் அவை வாழ்நாள் முழுவதும் தொடர்ந்து செயல்படும். தற்கால மனிதனுக்கு உடற்பயிற்சி என்பது மிகவும் பயங்கர மான ஒன்றாக உள்ளது என்பதை நாம் நன்கு அறிவோம். டாக்டர்களின் தூண்டுதல், நாம் வாழவேண்டும் என்ற ஆசை இவற்றால் சிலபல அடிகள் நடப்பதையே நாம் பெரிதாகக் கருதும் அளவில் இருக்கின்றோம்.

குழந்தைகளின் வளர்ச்சி காரணமாக நான்கு, ஐந்து வயதில் கடினமான போட்டி, விளையாட்டுகளுக்குக் குழந்தை ஆயத்தமாகின்றது. இந் நிலையில் பெற்றோர்கள் இதைத்

தொந்தரவாகக் கருதுகின்றார்கள். நர்சரியில் பிற குழந்தைக ளோடு விளையாடும் வாய்ப்பு கிடைப்பதோடு மட்டுமல்லாமல் பல்வேறு வகையான விளையாட்டுச் சாமான்களும் கிடைக் கின்றன. நாம் எவ்வளவு வசதி படைத்தவர்களாக இருந் தாலும் இம்மாதிரியான ஒரு சூழ்நிலையை நம்மால் வீட்டில் உருவாக்க இயலாது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

கோடைக் காலங்களில் அவர்களைக் கிராமங்களுக்குக் கூட்டிச்செல்லலாம். அங்கே சில நாட்கள் அவர்களைத் தங்க வைப்பதால் புதுவகையான சூழ்நிலையில் வாழக் குழந்தைகள் கற்றுக் கொள்கின்றன. இளம் வயதில் இருந்தே பல்வேறு புதுச் சூழ்நிலைகளில் வாழக் கற்றுக் கொள்ளும் குழந்தைகள், பிற்காலத்தில் எச்சூழ்நிலையிலும் வாழ அஞ்சமாட்டார்கள். நம்முடையது போன்ற மரபுவழிப்பட்ட (Traditional) கலாச் சாரத்திற்கு இம்மாதிரியான ஒரு மாற்றம் பெரிதும் தேவை. நம்மில் பலரால் நம் மாவட்டத்தை விட்டுக் குழந்தைகள் வெளியே செல்வதைக்கூடத் தாங்கிக்கொள்ள முடிவதில்லை. அப்படியே ஒரு வழியாக முடிவுசெய்து, பெங்களூருக்குப் போவதாக வைத்துக் கொள்ளுங்கள். உடனே நம் பெற்றோர், ‘கர்நாடகமா, ஐயோ! கர்நாடக மாநிலத்துக்கா செல்கிறாய் மகனே?’ என்று கேட்டுவிட்டால், ‘சரி பரவாயில்லை நான் போகவில்லை அம்மா? எனக்குப் பெரிய வேலை கிடைக்காவிட் டாலும் பரவாயில்லை. நான் நம் ஊரிலேயே இருந்துகொள் கிறேன்’ என்று சொல்லும் நிலையில்தான் நாமும் இருக் கிறோம். இந் நிலை மாறவேண்டும். நாம் மாறுவது என்பது இயலாது. நம் சந்ததிகளையாவது வீரமிக்க, தன்னம்பிக்கை யுள்ளவர்களாக ஆக்குவது நமது கடமையாகும்.





# நர்சரிக்கல்வி - ஒரு பகுப்பாய்வு

நர்சரிக் கல்வி குழந்தைகளின் பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் அமையவேண்டும். தேவைகள் என்று இங்குக் குறிப்பிடுவது பல்வேறு உயிரியல், உளவியல், சமூகத் தேவைகளேயாகும்.

உயிரியைப் பாதுகாக்கவும், உயிரி உயிர் வாழவும் தேவைப்படுவனவற்றை உயிரியல் தேவைகள் என்கிறோம். குழந்தைகளைப் பொறுத்தவரை உணவு, தூக்கம், கழிவை வெளியேற்றுதல் ஆகிய தேவைகள் இன்றியமையாதனவாகும். குழந்தைகளுக்கு நல்ல ஆளுமை ஏற்பட இவைகளைப் பூர்த்தி செய்தல் வேண்டற்பாலதாகும். எனவே நர்சரிப் பள்ளிகளில் இதற்கான வசதிகள் அமைத்துத் தரப்பட வேண்டும்.

குழந்தைகள் விரும்பும்போது தூங்க, நல்ல காற்றோட்டமும், வசதியும் பொருந்திய அறைகள் இருக்க வேண்டும். அதேபோல் குழந்தைகளுக்கு அவ்வப்போது உணவு கொடுப்பதற்கும் வசதிகள் இருக்கவேண்டும். குழந்தைகளின் தேக ஆரோக்கியத்திற்கும், மன வளர்ச்சிக்கும் (அதாவது நுண்ணறிவு, ஆளுமை, மனவெழுச்சி) இத் தேவைகளைப் பூர்த்திசெய்தல் மிகவும் இன்றியமையாததாகும்.

**சமூக உள்ளத் தேவைகள்**

வளரும் குழந்தைகளுக்கு உணவு, உடை, தூக்கம் மாத்திரம் இருந்தால் போதாது. வளர, வளர அதன் தேவைகளில் பெருத்த மாற்றம் ஏற்படுகிறது. முன்னே பெற்ருேருடன் விளையாடிய குழந்தை மூன்று நான்கு வயதான வுடன் தன் ஒப்பாருடன் விளையாட ஆரம்பிக்கின்றது. குறிப்பாகக் குழு விளையாட்டுக்களில் கவனம் செலுத்த முற்படுகிறது. விளையாட்டுக்கள் குழந்தைகளுக்குப் பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. மற்றும் விளையாட்டுக்கள் குழந்தைகளுக்குத் தன்னம்பிக்கை, வீரம், ஒரு குறிக்கோளை அடைதல், கூட்டு உயர்வு, போட்டி, பிரச்சினைகளைச் சமாளித்தல் ஆகியவைகளைக் கற்றுத் தருகின்றன.

குழந்தைகளுக்கு நல்ல உடல், உள்ள வளர்ச்சியை ஏற்படுத்தப் பல்வேறு விளையாட்டுக்களைப் புகுத்தலாம்.

அவைகளாவன :-

1. குழந்தைகளை அதன் போக்கில் விளையாட விடுதல். சில குழந்தைகளுக்குச் சில குழந்தைகளுடன்தான் விளையாடப் பிடிக்கும். அந்நிலையில் ஆசிரியை அதை உணர்ந்து செயல்பட வேண்டும். அதை விட்டுவிட்டு நம் இச்சைப்படி குழந்தையைச் செயல்படச் செய்யக்கூடாது. சில சமயங்களில் குழந்தைகள் தங்களுக்குள் அடித்துக் கொள்வதும் அதனுல் நீண்டநேர அழுகைகள் ஏற்படுவதும் இயற்கையே. இதுபற்றி நர்சரி ஆசிரியைகள் வருத்தப்படத் தேவையில்லை. இன்னேரன்ன செயல்கள் குழந்தையின் சமூகக் கல்வியில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. குழந்தையின் சமூக அறிவு வளர்தற்கு இவை உதவுகின்றன.

2. நர்சரிக் குழந்தைகளுக்குப் படம் வரைதல், சாயம் தீட்டுதல், மெழுகினுல் பற்பல உருவங்களைச் செய்தல், நடனம் கற்பித்தல், இசை, தோட்டக்கலை, நீச்சல் கலை ஆகியவைகளைக் கற்றுத்தர வேண்டும். நான்கு அல்லது ஐந்து வயதிலேயே இவற்றை அறிமுகப்படுத்துவதால் குழந்தைகளின்

ஆற்றல் ஆக்கப் பணியில் செலுத்தப்படுகிறது. குழந்தைகள் தங்களின் நுண்ணறிவு, அக்கறை, திறமை ஆகியவற்றிற்குத் தகுந்தவாறு ஒரு பொழுது போக்கைத் (Hobby) தேர்ந் தெடுத்து,அதில் தனிக் கவனம் செலுத்த ஆரம்பிக்கின்றனர். இரசியா, அமெரிக்கா போன்ற நாடுகளில் மூன்று, நான்கு வயதுக் குழந்தைகள் இராக்கெட் செய்து விளையாடுவதை நாம் செய்தித்தாள்களில் படித்தும், சினிமாவில் பார்த்தும் இருக்கிறோம். அச்செயல்களை வெறும் விளையாட்டுத்தான் என்று நினைத்துவிடக்கூடாது. இளம் வயதில் குழந்தைகளுக்கு ஏற்படும் அனுபவங்கள் அதன் உள்ளத்தில் பசுமரத்து ஆணிபோல் பதியும் என்பதை நாம் அறிவோம்.

எனவே, இன்றைய அறிவியல் முன்னேற்றங்களை விளையாட்டு வடிவங்களில் அமைத்து நம் குழந்தைகளுக்குப் படைக்க வேண்டும். மேலே கூறிய வசதிகளை நம்மில் பெரும் பாலோர் நம் இல்லங்களில் குழந்தைகளுக்கு அமைத்துத்தர இயலாது; கல்வி நிறுவனங்களால்தான் செய்ய இயலும். எனவே, நர்சரிப் பள்ளி நிறுவனங்கள் இக் கருத்துக்களை ஆராய்ந்து செயல்படுத்த முயன்றால் நாம் மிகச் சிறந்த சமுதாயத்தை உருவாக்கலாம். அரசும் இதற்குப் பெரிதும் உதவ வேண்டும்.

குழந்தைகளின் நுண்ணறிவு, ஆளுமை, மனவெழுச்சி ஆகியவற்றை வளர்க்க நர்சரி ஒரு சிறந்த இடமாகும். எனவே குழந்தைகளுக்கு இன்னோரன்ன கல்வியைக் கற்பிக்க நாம் முற்பட வேண்டும்.

**நர்சரி அமைப்பில்**
**ஈண்டுக் குறிப்பிடத்தக்கவைகளாவன :**

1. நர்சரிப் பள்ளியில் பெண்கள்தான் பணிபுரிய வேண்டும். இதற்கு உளவியல் காரணமுண்டு. குழந்தைகள் பிறந்தது முதல் அதன் பெரும்பாலான உடல் உள்ளத் தேவை களைத் தாய்தான் பூர்த்தி செய்கிறாள். எனவே, தனக்கு ஏதாவது பிரச்சினை ஏற்பட்டவுடன் குழந்தை அம்மாவைக் கூப்பிடுகிறது. பொதுவாகத் தாய்மீது ஒரு நல்ல மனப்பாங்கு

அமைகிறது. பள்ளியில் தன் ஆசிரியையைத் தன் தாயின் மறு உருவமாகக் குழந்தை கருதுகிறது. 'என் ஆசிரியை என் அம்மாவைப் போன்றவர்' என்று கருதுகிறது. அதாவது அன்பு இடம் மாறுகிறது (Transference of love) என்று சொல்லு வார்கள். நர்சரிப் பள்ளி ஆசிரியைகளின் கையில்தான் குழந்தைகளின் எதிர்காலமே உள்ளது என்பதை இக்கருத்து நன்கு விளக்கும். பிற மக்கள்மீதும் சமுதாயத்தின்மீதும் நல்லதொரு மனப்பாங்கை(Attitude) வளர்ப்பது ஆசிரியையின் கையில்தான் உள்ளது. நர்சரி செல்லும் குழந்தைகள் எப்போது பார்த்தாலும் எதற்கெடுத்தாலும் 'எங்கள் மிஸ், சொன்னூர்கள்' 'எங்கள் மிஸ்சுக்கு எல்லாம் தெரியும். போங்கப்பா! உங்களுக்கு ஒன்றும் தெரியாது'. 'எங்கள் மிஸ் சொல்வதுதான் சரி' என்று கூறக் கேட்டுள்ளோம். இதிலிருந்து நர்சரி ஆசிரியைகளின் கருத்துக்களை எந்த அளவுக்குக் குழந்தைகள் ஏற்றுக் கொள்கிறூர்கள் என்பதை அறியலாம்.

2. நர்சரிப் பள்ளி ஆசிரியைகளுக்கு நர்சரிக் கல்வி பற்றித் தனிப்பயிற்சி அளிக்கப்பட வேண்டும். குழந்தை உளவியல், குழந்தை கற்றல், குழந்தைகளின் உடல் வளர்ச்சி பற்றிய கருத்துக்களை நன்கு அறிந்தவர்களாக இருக்க வேண்டும்.

3. நர்சரிப் பள்ளியில் பணிபுரிய முன்வரும் பெண்கள் இத் தொழிலைத் தங்கள் வாழ்க்கையின் இலட்சியமாகக் கொண்டவர்களாக இருக்க வேண்டும். அதாவது இத் தொழிலில் மிகுந்த நாட்டமுள்ளவர்களைத் (Aptitude) தேர்ந்தெடுக்கவேண்டும். இவர்களைத் தேர்ந்தெடுக்கும் குழுவில் கல்வியாளர்களும், உளவியல் வல்லுநர்களும், சமூக இயலார்களும் இடம்பெற வேண்டும்.

4. சில நடத்தைப் பிரச்சினைகள் உள்ள குழந்தைகளைக் கவனித்து சிகிச்சையளிக்க உளவியல் அறிஞர்கள் (பகுதி நேர வேலை செய்பவர்கள்) இருக்க வேண்டும். நகம் கடித்தல், இரவில் படுக்கையை நனைத்தல், முரண்டு பிடித்தல், விரல் சூப்புதல் போன்ற நடத்தைப் பிரச்சினைகளை உளவியல் அடிப்படையில் எளிதில் குணப்படுத்த முடியும்.

5. பொதுவாக, குழந்தைகளுக்கு நல்ல சூழ்நிலையை (Enriched Environment) அமைத்துத்தர வேண்டும். குழந்தைகளின் பின்தங்கிய அறிவு வளர்ச்சிக்கு மோசமான சூழ்நிலை (Impoverished Environment) தான் காரணம் என்பதை ஆய்வுகள் நிரூபித்துள்ளன. நல்ல சூழ்நிலை என்பது குழந்தைக்குப் பல்வேறு தூண்டல்களை உண்டாக்கும் சூழ்நிலையாகும்.

நல்ல சூழ்நிலைக்கும் குழந்தையின் ஆளுமை (Personality) வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதைப் பல்வேறு ஆய்வுகள் காட்டியுள்ளன. எனவே, நர்சரிப் பள்ளிகள் குழந்தைகளுக்கு இத்தகைய சூழ்நிலையை உருவாக்கித்தர வேண்டும்.

6. நர்சரிப் பள்ளிகள் குழந்தைகளின் பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட வேண்டும். அதாவது குழந்தைகளைப் பொறுத்தவரை குடும்பத்தின் ஒரு பகுதியாக நர்சரிகள் அமைய வேண்டும். மாதத்திற்கு ஒரு முறையாவது குழந்தைகளின் பெற்றோர்களை அழைத்துக் கருத்தரங்குகள் நடத்த வேண்டும். அதில் ஆசிரியைகளும் பெற்றோரும் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ள வேண்டும். இருவரும் இணைந்து குழந்தையின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட வேண்டும். இத்தகைய கருத்தரங்குகளில் பெற்றோர் கட்டாயமாகக் கலந்துகொள்ள வேண்டும். கருத்தரங்கில் பல பிரச்சினைகள் எழலாம். அவைகளில் பலவற்றை ஆசிரியைகளும் பெற்றோர்களும் தீர்த்துக் கொள்ளலாம். தீர்வுகாண இயலாத சில பிரச்சினைகளுக்குக் கல்வியாளர்களிடமும், சமூகவியலார்களிடமும், உளவியலார்களிடமும், மருத்துவர்களிடமும் கேட்டுத் தீர்வுகாண வேண்டும்.

7. ஒவ்வொரு நர்சரிப்பள்ளிக்கும் ஒரு ஆலோசகர்குழு இன்றியமையாத ஒன்றாகும். இதில் கல்வியாளர், சமூகவியலாளர், உளவியல் வல்லுநர், மருத்துவர், பெற்றோர்களின் பிரதிநிதி ஒருவர் ஆகியோர் இடம் பெறுவர். தலைமை ஆசிரியர் இக்குழுவின் செயலாளராக இருப்பார். ஆக மூன்று அல்லது நான்கு மாதங்களுக்கு ஒருமுறை இக்குழு கூடிப் பள்ளியின் நடைமுறைகளையும், பள்ளியின் திட்டங்களையும் ஆராய்ந்து அறிவுரை வழங்கும்.

8. குழந்தைக் கல்வி பற்றிய சிலபத்திரிகைகள் நர்சரிப் பள்ளிகளில் கிடைக்குமாறு செய்யவேண்டும். நூல்களைப் பொறுத்த வரையில் உயர்கல்விக்குக் கொடுக்கும் இடத்தில் $\frac{1}{10}$ பங்குகூட குழந்தைக் கல்விக்கு நாம் கொடுப்பதில்லை. இந்நிலை மாறவேண்டும். குழந்தைக் கல்வி பற்றிய நூல்களும் பத்திரிகைகளும் நர்சரிப் பள்ளிகளில் கிடைக்கும்படி செய்ய வேண்டும். இதனால் நர்சரிப் பள்ளி ஆசிரியைகள் பெரிதும் பயனடைவார்கள். அப்பயன் குழந்தைச் செல்வங்களுக்குக் கிட்ட இந்நூல்களும் பத்திரிகைகளும் துணையாய் அமையும்.

9. ஆசிரியை அன்பு காட்டுபவர்களாகவும் அரவணைப் பவர்களாகவும் இருந்தால் அவர்கள்மீது ஏற்படும் அன்பும், நல்லதொரு மனப்பாங்கும் கல்விமீதும் ஏற்படுகிறது. மாறாக, ஆசிரியைமீது குழந்தைக்கு வெறுப்பு ஏற்பட்டால் அதே வெறுப்பு கல்விமீதும் ஏற்படும். உயர்ந்த நுண்ணறிவு உள்ள சிலர் பள்ளிகளிலிருந்தும், கல்லூரிகளிலிருந்தும் விலகி விடுவதற்குக் காரணம் தங்களுக்கும் ஆசிரியர்களுக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளேயாகும் என்பதைச் சில ஆய்வுகள் எடுத்துக்காட்டியுள்ளன.

மேற்கூறிய கருத்துக்களை நடைமுறைக்குக் கொண்டு வருவதை இயலாத ஒன்றாகச் சிலர் நினைக்கலாம். முயன்றால் முடியாதது இல்லை. நாம் ஒரு சிறந்த இந்தியாவை உருவாக்க இவைகளைச் செய்துதான் ஆக வேண்டும். மனம் இருந்தால் மார்க்கமுண்டு என்று சொல்வார்கள். எனவே, நமக்கு மாற்றத்தை உண்டாக்கும் மனப்பாங்கு ஏற்பட்டால் மேற்கூறிய மாற்றங்களை ஒருநொடியில் ஏற்படுத்திவிடலாம். எதிர்கால இந்தியா இன்றைய இளஞ்சிறார்களின் கையில். எனவே அவர்களைச் சான்றோர்களாக்க இயன்றதைச் செய்வது நம் கடமையாகும்.

குழந்தைக் கல்வியில் இம் மாற்றங்களை ஏற்படுத்துவதன் மூலம் உயர் கல்வியில் இன்று நாம் காணும் 75% பிரச்சினைகளைத் தவிர்க்கலாம். எனவே, வியாபார முறையில் பார்த்தால்கூட இது ஒரு நல்ல மூலதனம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

4

# நர்சரிக் கல்வியில் தன்னம்பிக்கையை வளர்த்தல்

நர்சரிப் பள்ளிகள் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதுபற்றி முன்னைய கட்டுரையில் கண்டோம். நர்சரிக் கல்வி என்பது குழந்தைகளை எதிர்காலத்திற்குத் தயார் செய்வது; எதிர் காலத்தில் சிறப்பாக வாழ வழிவகுத்துத் தருவது; சான்றோனாக்குவது. சரி இவைகளைத்தான் நம் குறிக்கோள் என்றால் ஏட்டுக் கல்வியின் மூலம் இக்குறிக் கோள்களை அடையமுடியுமா? ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாது என்பது அனைவரும் அறிந்ததே! பிறகு ஏன் புகட்ட வேண்டும்? சுவாமி விவேகானந்தர் கூறுகின்றார் 'கல்வியின் குறிக்கோள் என்ன?' ஒருவனைத் தன் காலிலேயே நிற்கத் தயார் செய்தல். Education should make one to stand on his own legs; Education should be man making; Education should be life building. கலைக்கதிர் ஆசிரியர் பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் இதே கருத்தைத்தான் வலியுறுத்தி வருகிறார்.

தன்னை நம்பியே வாழக்கற்றுக் கொடுத்தல்; அதாவது தன்னம்பிக்கையை வளர்த்தல்; மனிதனை மனிதனாக்குதல் இவைகள்தான் நர்சரிக் கல்வியின் அடிப்படை நோக்கங்களாக

அமையவேண்டும். நம்மைப் பொறுத்தவரை கற்றவர்கள் என்ருல் யார்? சர்வகலாசாலேகளுக்குச் சென்று பி. ஏ., எம். ஏ., பட்டம் பெற்றவர்களேக் கற்றவர்கள் என்கிருேம். அவ்வாறு சென்று கல்வி பயிலாத அல்லது பட்டம் பெருதவர்களேக் கற்றவர்கள் என்று நாம் குறிப்பிடுவதில்லே. இதைவிட நல்ல நகைச்சுவை வேறு எதுவும் இருக்கமுடியாது. பண்டைய, இன்றைய அறிஞர்களில் பலரைப் பாருங்கள். அவர்களில் 100க்கு 90 பேர் குக்கிராமங்களில் இருந்து வந்த வர்கள். சர்வகலாசாலேகளேப் பற்றிக் கேள்விப்படாதவர்கள். குறிப்பாக அவர்கள் காலத்தில் கான்வென்ட் பள்ளிகள் இருந்ததாகவே தெரியவில்லே. அப்படி இருந்தும் அவர்கள் எப்படிப் பெரிய அரசியல்வாதிகள் ஆனுர்கள்; பெறும் கல்வி யாளர்கள் ஆனுர்கள்; பெரும் மதத்தலேவர்கள் ஆனுர்கள்; பெரும் தேசத் தலேவர்கள் ஆனுர்கள். சிந்திக்க வேண்டிய ஒன்று. இவைகளே எல்லாம் பார்க்கும்போது நாம் வகுப் பறையில் கற்பது கல்வி என்ற கடலில் ஒருதுளிதான் என்று தெரிகின்றது. ஆனுல் நாம் நம் பாடங்களேயும், வகுப்பறைக் கல்வியையும் ஒரு கட-லாகவும் வாழ்க்கைக் கல்வியை ஒருதுளி யாகவும் கருதி விடுகிருேமே! இந்நிலே மாறவேண்டாமா? நிறைய நூல்களேப்படிப்பதும் நிறையக் கருத்துக்களேத் தெரிந்து கொள்வதும்தான் கல்வி என்ருல் நூல் நிலேயங்களேப் பேரறிஞர்கள் என்று கூறலாமே! ஏனெனில் அங்கு நிறைய கருத்துக்கள் இருக்குமே! குழந்தைகளுக்கு ஓரிரண்டு கொள்கைகளேக் கற்றுக் கொடுத்தாலும் வாழ்நாள் முழுவதும் பயனளிக்கும் வகையில் அமைந்தால் அதைப்பெரும் கல்வி யாகக் கருதலாம் என்பது எம்போன்ருேர் கருத்து. மற்றும் குழந்தையை எதிர்காலத்திற்குத் தயார் செய்வதில் தன்னம் பிக்கையை வளர்ப்பதில் ஆசிரியர்களும், பெற்ருேர்களும் பெரும் பங்கு வகிக்கிருர்கள்.

ஏட்டுக்கல்விக்குமுன் குழந்தைக்குத் தன்னம்பிக் கையை வளர்க்க வேண்டும். வாழ்க்கையில் வெற்றிபெற ஒருவனுக்குத் தன்னம்பிக்கை மிகவும் அவசியம். ஒருவன் எவ்வளவு நுண்ணறிவு (Intelligence) படைத்தவனுயினும்

எவ்வளவு உடல் வலிமை பெற்றவனுயினும் தன்னம்பிக்கை என்று ஒன்று இல்லாவிட்டால் அவன் கோழையே. இன்று நம் இளைஞர் சமுதாயம் இந்நிலையில்தான் உள்ளது என்பது கசப்பான உண்மையே! நம் இளைஞர்கள் உயர்ந்த நுண்ணறிவு படைத்தவர்கள் என்பதையும், ஓரளவுக்கு உடல் வலிமை பெற்றவர்கள் என்பதையும் யாரும் மறுக்க இயலாது. இருப்பினும் எப்போதும் எதற்கும் பிறரைச் சார்ந்தும், உளவலிமை அற்றும், அஞ்சியும் வாழ்கிறுர்கள் என்ருல் காரணம் தன்னம்பிக்கை இன்மைதான். தன்னம்பிக்கையை மாத்திரம் நம் குழந்தைகளுக்கு வளர்த்து விட்டால் நம் எதிர்காலச் சமுதாயம் உலகையே வெல்லும் என்பதில் ஐயமில்லை.

**தன்னம்பிக்கை என்ருல் என்ன?** எந்த ஒரு காரியத்தையும் செய்யக் கூடிய வலிமை என்னிடம் உள்ளது; என்னுடைய ஆற்றலே எனக்குப் போதும்; எனக்கு வேறு யாரும் உதவ வேண்டிய அவசியமில்லை; பிறரைப் போலவே அல்லது பிறரைவிட அதிகமான ஆற்றல், அறிவு, நுண்மாண்நுழைபுலம் என்னிடம் உள்ளன; தோல்விகள் ஏற்படுவது இயற்கையே; அதைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் என்னிடம் உள்ளது என்று எவன் ஒருவன் நினைக்கிருனே அவனே தன்னம்பிக்கை படைத்தவன். நம்முடைய கல்வித்திட்டம் இவைகளை வளர்க்கும்படி அமைதல் வேண்டும். குழந்தைகளிடம் தன்னம்பிக்கையை வளர்ப்பது எப்படி என்பது பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

**அன்பும் ஏற்றுக்கொள்ளுதலும்** *(Love and Acceptance):* குழந்தைகளிடம் உண்மையான அன்பு காட்டவேண்டும். நாம் அன்பு காட்டுவதால் குழந்தை, தான் ஒரு முக்கியமான அங்கத்தினன் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்கிறது. இந்தத் ''தான்'' என்னும் எண்ணத்தை ஆங்கிலத்தில் Self என்று சொல்வார்கள். ஒரு தனியனின் ஆளுமை வளர்ச்சியில் குழந்தையானது பெறும் ''தான்'' என்ற எண்ணம் மிக இன்றியமையாத ஒன்ருகும். தான் ஆற்றல் படைத்தவன், தான் முக்கியமானவன், தான் உலகத்தினரால் வேண்டப்படுபவன் என்ற எண்ணங்கள் நம்அன்பைப்பொறுத்துத்தான் உண்டாகின்றன.

**குழந்தையை ஏற்றுக்கொள்ளுதல்:** ஏற்றுக் கொள்ளுதல் என்பது, குழந்தை அழகாக இருக்கிறது; ஜான்சன் பவுடர் போட்டுக்கொள்வதால் மணமாக இருக்கிறது. என்பதற்காக ஏற்றுக்கொள்வது அல்ல. ஏற்றுக் கொள்வது, என்பது (Accepting him as a unique Individual, Accepting him unconditionally) ஒரு குழந்தையை அந்தக் குழந்தையாக முழுவதும் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதாகும். ஒவ்வொரு குழந்தைக்கும் தனித்தன்மை உண்டு. அந்தத் தனித்தன்மையை உணர்ந்து ஒப்புதல்தான் ஏற்றுக் கொள்வது ஆகும். சான்ருக ஒரு குழந்தையின் பெயர் 'பேபி' என்று வைத்துக் கொள்ளுங்கள். பேபியை பேபியாக ஏற்றுக்கொள்ளுதல்; பேபியை வேறுசில குழந்தைகளோடு ஒப்பிட்டு பேபி நல்லவள்; பேபி குறும்பு; நம் பேபியைவிட பக்கத்து வீட்டுப் பேபி புத்திசாலி என்று இல்லாமல் நம் பேபியை நம் பேபியாகவே ஏற்றுக்கொள்ளுதல்; அதாவது ஒவ்வொருவரின் தனித் தன்மையை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இரண்டாவதாக சில பெற்ருேரும், சில ஆசிரியரும் குழந்தைகள் என்ன செய்தாலும் எந்த அளவுக்குச் சிறப்பாகச் செய்தாலும் திருப்தியடைவதில்லை. இன்னும் நன்ருகச் செய், நான் எதிர்பார்த்ததில் பாதிகூட இல்லை என்பதைத் தொடர்ந்து சொல்லிக்கொண்டே இருப்பார்கள். இந்நிலையில் அக்குழந்தைக்கு வெற்றி உணர்வே தோன்ருது. நாம் எவ்வளவு நன்ருகச் செய்தாலும் நம்மைக் குறை கூறுகிருர்களே; நம்முடைய நுண்ணறிவும் நம் ஆற்றலும் மற்றவர்களைவிட மிகவும் குறைந்தன போலும்; நம்மால் இந்த உலகத்தைச் சமாளிக்க முடியாது; நாம் எல்லாவற்றிலும் தாழ்ந்தவர்கள்; வாழ்க்கையில் நமக்கு எப்போதுமே தோல்விதான் என்ற எண்ணத்தை வளர்த்துக்கொள்ள முற்படுகிருர்கள். அதாவது தாழ்வு மனப்பான்மைக்கு (Inferiority Complex) இதுவே அடிப்படையாக அமைகிறது. எனவே குழந்தைகளை நம்முடன் அல்லது பிற குழந்தைகளுடன் ஒப்பிட்டு நடத்துவது மிகவும் அபாயகரமானதாகும். மாருக, குழந்தைகள் செய்யும் சிறு செயல்களையும் நாம் உற்சாகப்படுத்த (Encourage) வேண்டும்.

அதற்குத் தகுந்த வெகுமதிகள் அளிக்க வேண்டும். தவறுகள் செய்யும்போது தண்டனைகள் மிகக்கடினமாக இருக்கக்கூடாது. கற்றலில் தவறுகள் ஏற்படுவது இயற்கையே. குழந்தையின் ஆற்றலுக்கு அப்பாற்பட்டவைகளை நாம் தொடர்ந்து எதிர் பார்ப்பதால் குழந்தைகள் மனமுறிவுக்காளாகி தன்னம்பிக் கையை இழக்கிறார்கள். இது பிற்காலத்தில் பல்வேறு உளக் கோளாறுகளுக்கு அடிப்படையாய் அமைகிறது.

அடுத்துச் சில பெற்றோர்கள் குழந்தைகளை மிகையாய்ப் பாதுகாக்கிறார்கள். அதாவது குழந்தைகளைத் தானாகவே எதுவும் செய்ய அனுமதிப்பதில்லை. வெளியில் செல்லும் போதெல்லாம் துணையுடன் அனுப்புவது, குழந்தைகளின் தேவைகள் அனைத்தையும் குழந்தைகள் கேட்குமுன் கவனித்துக் கொள்வதுபோன்ற செயல்களையே இங்குக் குறிப்பிடுகிறோம். இவைகள் குழந்தையின் வளர்ச்சியை மிகவும் பாதிக்கின்றன. தன்னம்பிக்கையை வளர்க்க ஓரளவு சுதந்திரமும், பொறுப்பும், சவாலும் தேவை. இளம் வயதிலிருந்தே சில பொறுப்புக்களைக் குழந்தைகளிடம் தரவேண்டும். மற்றும் குழந்தைகளுக்குச் சவாலாக அமையும் செயல்களில் அவர்களை ஈடுபடுத்த வேண்டும். இதனால் சில தவறுகள் ஏற்படலாம். சில துன்பங்களுக்குக்கூட ஆளாகலாம்: பரவாயில்லை; குழந்தைகளின் தன்னம்பிக்கையை வளர்ப்பதில் இச் செயல்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன.

நம் நர்சரிக் கல்வி குழந்தைகளுக்குத் தன்னம்பிக் கையை ஊட்டும் வகையில் அமையவேண்டும். ஏற்கெனவே சமூகம் இதை உணரத்தொடங்கிவிட்டது. கல்வித்திட்டத்தில் மாற்றங்களைச் செய்ய முற்படும்போது முதற்படியாகக் குழந்தைக்கல்வியில் மாற்றங்களைச் செய்யவேண்டும் என்பதே எங்கள் வேண்டுகோள்.

இத்தகைய நர்சரிப் பள்ளிகளை அமைக்கும் பணியில் அரசு பெரிதும் அக்கறை காட்டவேண்டும். எல்லாக் குழந்தை களுக்கும் இத்தகைய வசதிகள் கிட்டும் வகையில் அரசு ஆங்காங்கே பல கல்வி நிறுவனங்களை அமைத்தல் மிகவும் வேண்டற்பாலதாகும்.

ஒரு தனியன் எதிர்காலத்தில் எப்படி இருப்பான் என்பது அவனுடைய முதல் நான்கு அல்லது ஐந்தாண்டுகளில் அவன் பெறும் அனுபவத்தைப் பொறுத்ததே என்பதும் அவனுடைய ஆளுமையின் முக்கிய பகுதி அப்போதே உருவாகி விடுகிறது என்பதும் உளவியலார் கண்ட உண்மை. பிற் காலத்தில், தனியனின் நடத்தையை மாற்றுவது என்பது மிகவும் கடினமான செயலாகும். அதை நாம் கண்கூடாகக் கண்டுவருகிறோம். எனவே குழந்தைப் பருவத்திற்கு மிகவும் முக்கியத்துவம் அளிப்பதன் மூலம் ஒரு நல்ல சமுதாயத்தை உருவாக்கலாம். ''ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது'' ''இளமையில் கல்'' போன்ற பழமொழிகள் மிகவும் பொருள் பொதிந்தனவாகும். பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்களின் கருத்தை ஈண்டு ஒப்புநோக்குதல் பொருத்த முடையதாகும்.

"I also believe that it is important for schools to begin to design ways for children, even at a very young age, to talk about the future, their own hopes, dreams and images even if they are foolish. It is valuable for young people to work even when they are very young."

(Quoted from Education in 2000 Prof G. R. Damodaran).



# 5

# குழந்தைகளைப் பள்ளிக்கனுப்பச் சரியான வயது - புதிய சிந்தனை

குழந்தைகளை 10 வயதில்தான் பள்ளிக்கனுப்ப வேண்டும் என்று கூறினுல் ஓரளவுக்கு வேடிக்கையாகவும், நகைச் சுவையாகவும் இருக்கலாம். குழந்தைகளைப் பள்ளிக்கனுப்ப 9 அல்லது 10 தான் சரியான வயது; பள்ளிச் சூழ்நிலையை ஏற்றுக்கொள்ளும் அளவுக்குக் குழந்தையின் உடல் - உள வளர்ச்சிகள் 9 அல்லது 10 வயதில்தான் முற்றுப்பெறுகின்றன என்று ஜெர்மானிய குழந்தை நிபுணரும் பேராசிரியருமான ஹென்சல் என்பவர் அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிருர். தற்போதைய கருத்தான 6, சரியான வயது என்பது தவறு என்றும், அது பழைய கருத்து, அறிவின்பாற்பட்டதல்ல என்றும் பேராசிரியர் ஹென்சல் அவர்கள் தன்னுடைய நீண்டநாள் ஆராய்ச்சியின் மூலமாகக் கண்டுள்ளார். ''குழந்தைகள் எந்த அளவுக்குப் பள்ளி நாற்காலிகளில் குறைவாக உட்காருகிருர்களோ அந்த அளவுக்கு நல்லது'' என்றும் கூறுகிருர். பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் உயர் கல்வியில் இக்கருத்தை வலியுறுத்துவது குறிப்பிடத்தக்கது.

பூ. சா. கோ. பொறியியல் கல்லூரியின் வெள்ளி விழா மலரில் 'The Future' என்னும் கட்டுரையில் பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் குறிப்பிடுவதாவது: ''I am hopeful that the teachers will be convinced in the matter of reducing their contact hours and only teach the students how to learn by themselves.'' இதே கருத்து அடிப்படைக் கல்விக்கும் பொருந்தும் என்பது எம்போன்றோர் கருத்து.

அடுத்து, குழந்தை மருத்துவ நிபுணரான ஹெல்புருக்கி என்பவரும் 6 வயதில் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்புவது மிகவும் வருந்தத்தக்க செய்தி என்கிறார். 6 வயதில் பள்ளிச் சூழ்நிலையைச் சமாளிக்கும் அளவுக்குக் குழந்தையின் மூளை, வளர்ச்சி பெறுவதில்லை என்பதும் மற்றும் உடலின் பல்வேறு அமைப்புக்கள் போதிய வளர்ச்சி பெறுவதில்லை என்பதும் அவர்கள் ஆராய்ச்சியின் வாயிலாகக் கண்ட உண்மையாகும். 6 வயதில் பல குழந்தைகள் பள்ளிச் சூழ்நிலையைச் சமாளிக்க முடியாமல் பல பிரச்சினைகளுக்கு ஆளாவதையும், தேர்வில் வெற்றி பெறாமையும் இதற்கு எடுத்துக்காட்டு என்கிறார் பேராசிரியர் ஹென்சல். இக்கருத்து ஜெர்மானியக் கல்வியாளர்களிடையே பெரும் புரட்சியை உண்டாக்கியுள்ளது. இதுபற்றிக் குழந்தை மருத்துவர்களும், உளவியல் நிபுணர்களும், சமூகவியல் அறிஞர்களும் தொடர்ந்து ஆய்வுகள் நடத்தி வருகிறார்கள். ஜெர்மானிய நாட்டில் அடிப்படைக் கல்வியில் இம்மாதிரியான ஒரு மாற்றத்தை உண்டாக்குவது பற்றித் தீவிரமாக ஆலோசித்து வருகிறார்கள்.

அமெரிக்கக் குழந்தை நிபுணரான பேராசிரியர் ரேமாண்ட்மூர் என்பவரும் குழந்தைகள் பள்ளி வாழ்க்கையைத் தொடங்க 9 தான் சரியான வயது என்று கூறுகிறார். குழந்தைகளுக்கு 10 வயது வரை முழுமையான தன்னிலை உணர்வு (Self awarness) வருவதில்லை; 9 வயதுக்கு மேல்தான் கருத்தியல் (abstract) மற்றும் பகுப்புச் சிந்தனை செய்யும் முதிர்ச்சியை மூளை பெறுகிறது என்பதும் அவர் கருத்தாகும்.

குழந்தையை மிக இளம் வயதிலேயே பள்ளிக்கு அனுப்புவதால் அதன் எதிர்காலம் மிகவும் பாதிக்கப்படும் என்பது இவ்வறிஞர்களின் கருத்தாகும்.

இன்னோரன்ன கருத்துக்கள் நம் பொது அறிவுக்கு (commonsense) ஒத்துவருவதில்லை என்பதால் புறக்கணித்துவிட முடியாது. 6 வயதில் நாம் குழந்தைகளை 1-ஆம் வகுப்பில் சேர்க்கிறோம். அதன் அடிப்படை என்ன? நம் பெற்றோர் அப்படிச் செய்தார்கள், எனவே நாமும் செய்கிறோம். நாம் செய்வதைப் பார்த்து நம் வருங்காலச் சந்ததியினர் செய்யப் போகிறார்கள். இவ்வாறு செய்வது அறிவின்பாற்பட்டதல்ல. 6 வயது என்ற வரம்பை ஆங்கிலேயர்கள் கொண்டு வந்தார்கள். மேலை நாட்டுக்குப் பொருந்துவது நம் நாட்டுக்குப் பொருந்தும் என்று எப்படிக் கூறமுடியும்? நம்முடைய நாட்டிலும் 2, 3 தலைமுறைகளுக்குமுன் நிலவிய நிலையைப் பார்க்கும்போது 9, 10 வயதில்தான் பள்ளிகளுக்குச் சென்றதாகத் தெரிகிறது.

எது எப்படியோ, நம் நாட்டிலும் இது பற்றிய ஆய்வுகள் மிகவும் தேவை. கல்வியாளர்களும் குழந்தை மருத்துவ நிபுணர்களும், உளவியல், சமூகவியல் நிபுணர்களும் இதுபற்றிய ஆய்வுகளை மேற்கொண்டு நம் குழந்தைகள் பள்ளி செல்லச் சரியான வயது எது என்பதைக் கண்டு பிடிப்பது மிகவும் வேண்டற்பாலதாகும். இதன் மூலம் அடிப்படைக் கல்வியாம் ஆரம்பக் கல்வியில் சிறந்த முன்னேற்றத்தை அடையலாம்.







# 1

# இளமைப் பருவமும் அதன் பிரச்சினைகளும்

•

மனித வளர்ச்சிப் பருவங்களிலேயே மிக முதன்மை வாய்ந்ததும், யாவருக்கும் புரியாத புதிராக உள்ளதும் இளமைப் பருவமே ஆகும். பொதுவாகப் பதின் காலத்தை (Teenages) இளமைப் பருவம் என்று உளவியலார் குறிப்பிடு வார்கள். இப்பருவத்தில் இளைஞன் பெற்றோருக்கும் ஆசிரியருக்கும் சமுதாயத்திற்கும்-ஏன் தனக்குமே ஒரு புரியாத புதிராக உள்ளான். இளமைப் பருவத்தைப் பிரச்சினைகள் நிறைந்த காலம் (Problem Age) என்று சொல்லுவார்கள். ''இளமைப் பருவம் குமுறல்களும் மனவெழுச்சி அழுத்தங்களும் நிறைந்த பருவம் (Period of Storm and stress)'' என்று ஸ்டான்லிஹால் என்னும் பேராசிரியர் குறிப்பிடுகிறார். இவர் இப்பருவத்தைப் பற்றி விளக்கும்போது இளைஞனின் நிலை எப்படி உள்ளது என்றால், குருவிக் குஞ்சுகள் இறக்கை முழுவதும் முளைக்காத நிலையில் எப்படிப் பறக்கத் துடிக்கின்றதோ, அதைப் போன்றது என்று அழகாகக் கூறுகிறார்.

•

இந்நிலையில் இளைஞனின் உள்ளத்தைப் புரிந்துகொள்வது மிகவும் சிக்கலான ஒன்றாகும். இளமைப் பருவம் ஏன் பிரச்சினைகள் நிறைந்த பருவமாக உள்ளது என்பது பற்றிச் சிறிது ஆராய்வோம். இதற்குப் பல காரணங்கள் உண்டு. இவைகளைச் சுருக்கமாகக் காண்போம்.

## பூப்படைதல் (Puberty)

பூப்படைதல் இளமைப் பருவத்தின் ஒரு குறிப்பிடத் தக்கநிகழ்ச்சியாகும். பெண்கள்பூப்படைதலை வயதுக்குவருதல், பெரியவளாதல் என்று குறிப்பிடுவார்கள். சிறுவர்களுக்கு முதன் முதலில் விந்து வெளியாதலைப் பூப்படைதல் நிகழ்ச்சியாகக் கொள்ளலாம். நம்முடைய கலாச்சாரத்தில் பெண் பூப்படைந்தவுடன் பல்வேறு நிகழ்ச்சிகளை (pubic ceremonies) நடத்தி, அவள் திருமணத்திற்கு ஏற்றவள் என்று சமூகத்திற்கு அறிவிக்கிறோம். இளமைப் பருவத்தில், குறிப்பாகச் சிறுமியருக்குப் பூப்படைதல் பல்வேறு மனவெழுச்சி, உளப் பிரச்சினைகளை உண்டாக்குகிறது. இதனால் ஏற்படும் உடல் மாற்றங்கள் சிறுமிக்குச் சிறிது அதிர்ச்சியையும், பயத்தையும் ஏற்படுத்துகின்றன. சமூகக் கட்டுப்பாடுகளின் காரணமாக இதுபற்றி வெளிப்படையாக விவாதிக்கவோ தன் பிரச்சினைகளைச் சொல்லவோ இயலாத நிலையில் சிறுமி உள்ளாள். சினிமா மொழியில் சொல்லப் போனால் ''சொல்லத்தான் நினைக்கிறேன். ஆனால்......'' என்ற நிலைதான். அச்சிறுமியின் மேல் பெற்றோர், உற்றார், சமூகத்தினர் ஆகியோர் கொண்டுள்ள மனப்பாங்கும், (Attitude) மாறுகிறது. அன்றுவரை அவளைச் சிறுமியாக நினைத்த அனைவரும், பூப்புச் சடங்குகளுக்குப் பிறகு, அவள் பெரியவளாகிவிட்டாள் என்ற வகையில் பார்க்கவும், பேசவும் முற்படுகிறார்கள். இம்மாற்றங்களுக்குத் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளாத சிறுமி, சில பல பிரச்சினைகளுக்கு ஆளாகிறாள்.

பூப்படைதலுக்குப் பின் பல்வேறு உடல் மாற்றங்கள் ஏற்படுகின்றன. உயரம், பருமன் விரைவாக அதிகரிக்கின்றது. செரிமான உறுப்புக்கள் விரைந்து வளர்ச்சியடைகின்றன. இதன் காரணமாக மிக்க பசி உண்டாகிறது. சிறுவர், சிறுமியர் நிறைய சாப்பிட முற்படுகின்றார்கள். எந்த நேரமும் ஏதாவது கேட்டுக்கொண்டே யிருப்பார்கள். இதற்காக அதிகப்பணம் செலவிடுவார்கள். சில பெற்றோர்களுக்கு இது பிரச்சினையாக இருப்பதும் உண்டு. இப் பருவத்தில் இரண்டாம் வழிப் பால்நிலைப் பண்புகளின் (secondary sex characteristics) வளர்ச்சி குறிப்பிடத்தக்கதாகும். மார்பகங்களில்

விரைவான வளர்ச்சி ஏற்படுதல், குரல் மாற்றங்கள், பூப்பு மயிர் ஆகிய வளர்ச்சிகள் சிறுவர் சிறுமியருக்குச் சிறிது மனவெழுச்சிப் பிரச்சினைகளை உண்டாக்குகின்றன.

இம்மாதிரியான வளர்ச்சிகள் ஏற்படும் பொழுது, சிறுவர் சிறுமியர் தங்கள் உயரம், முக அமைப்பு, ஆகியவைகளைத் தங்கள் ஒப்பாருடன் (Peers) ஒப்பிட்டுக் கொண்டேயிருப்பார்கள். குறிப்பாகச் சிறுமியர், பிறரைப் போலவே தங்கள் உடல் வளர்ச்சி உள்ளதா என்றும், பிறரைப் போலவே தாங்களும் அழகாக இருக்கின்றோமா என்றும் (முக அமைப்பு, உயரம், மார்பகம்) ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டேயிருப்பார்கள். ஒருவேளை அழகு குறைவாக இருப்பதாகத் தாங்களாகவே நினைத்துக்கொள்ளும் போதும், முகப்பரு, உடல் பருமன் அதிகரித்தல் போன்ற அழகைக் கெடுக்கும் பிரச்சினைகள் ஏற்படும்பொழுதும் பெரிய அதிர்ச்சிக்கு ஆளாவார்கள். சிறுவர்கள் தாங்கள் வலிமையுள்ளவர்களாக இருக்கவேண்டுமென்றும், நல்ல உடற்கட்டு இருக்கவேண்டுமென்றும் ஏங்குவார்கள்.

**ஒப்பார் குழுக்கள் (Peer Groups)**

ஒப்பார் குழுக்கள் இளைஞர்கள்மேல் மிகுந்த ஆதிக்கம் செலுத்துகின்றன. இளைஞனின் நடத்தையைப் பாதிக்கும் காரணிகளுள் ஒப்பார் குழுக்களின் பங்கு மிகவும் இன்றியமையாததாகும். நீண்ட முடி வளர்த்தல், 'பெல்பாட்டம்' அணிதல், சிகரெட் பிடித்தல், மது வகைகளை அருந்துதல், போதை தரும் மருந்துகளைச் சுவைத்தல், பெண்களைக் கேலி செய்தல் போன்ற நடத்தைகட்கு இக் குழுக்களே காரணமாக அமைகின்றன. அதாவது, இப் பருவத்தில் தன் முதல் நன்றி, நம்பிக்கை யெல்லாம் இக் குழுவுக்குத்தான். பிறகுதான் பெற்றோர், மற்றோர். இந் நிலையில் பெற்றோர், இளைஞர்களைத் தவறாகப் புரிந்துகொள்வது இயற்கையே. நான் பாலூட்டி சீராட்டி வளர்த்த என் பிள்ளை என் பேச்சைக் கேட்பதில்லை. யாரோ, அவன் நண்பனும், அவன் சொன்னால் உயிரையே கொடுப்பதாகச் சொல்லுகிறான்; ''என்ன கொடுமை!'' என்று வருந்துவார்கள்.

இளைஞர்களுடைய பல்வேறு சமூக உள்ளத் தேவைகள் எல்லாம் குழுக்கள் மூலமாகத்தான் நிறைவேறு கின்றன என்பதை நாம் உணரவேண்டும். தாங்கள் ஒரு குழுவில் இருக்கும்பொழுது தங்களை வீரம் மிக்கவர்களாகவும், தாங்கள் எதற்கும் துணிந்தவர்கள் என்றும் நினைக்கிறார்கள். தாங்கள் உறுப்பினராக இருக்கும் குழுக்களைப் பொறுத்து, இளைஞர்களின் நடத்தை அமைவதால், அவர்களை நல்ல கொள்கைகள்கொண்ட குழுக்களில் பழகும்படி செய்வது வேண்டற்பாலதாகும். சில பெற்றோர் இளைஞர்களைக் குழுக்களில் சேரவோ தன் ஒத்த நண்பர்களுடன் விளையாடவோ அனுமதிப்பதில்லை. இது இளைஞனின் ஆளுமை வளர்ச்சியை மிகவும் பாதிக்கும் என்பதை ஆய்வுகள் காட்டியுள்ளன. இளைஞர் உலகத்தைப் புரிந்துகொள்வதில் குழுக்கள் முதன்மையான பங்கு கொள்கின்றன. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்தல், கூட்டுறவு, ஒத்துப்போதல், போட்டி மனப்பான்மை ஆகிய சமூக நடத்தைகளைக் கற்றுக் கொள்ளவும் குழுக்கள் துணையாக அமைகின்றன. இந்நிலையில் பெற்றோர் தங்களைப் புரிந்து கொள்ளவில்லையே என்று சில இளைஞர்கள் வருந்துவதுண்டு. இன்னும் சில இளைஞர்கள் தாக்குந் தன்மையிலும், வெறிச் செயல்களிலும் ஈடுபடுவதுண்டு. பெற்றோர்கள் மிகையாகத் தண்டிப்பதன் மூலமும் மிகுந்த கட்டுப்பாட்டுடன் நடந்துகொள்வதன் மூலமும், இளைஞர்களைச் சமூகத்திற்குப் புறம்பான செயல்களில் ஈடுபடச் செய்ய அவர்களே காரணமாக உள்ளனர் என்பதை ஆய்வுகள் காட்டியுள்ளன. சான்றாக, இளைஞன் ஒருவனைச் சினிமாவிற்கே எப்போதும் செல்லக்கூடாது என்று பெற்றோர் கெடுபிடி படுத்தும் நிலையில், இளைஞன் பெற்றோருக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாகச் சினிமாவிற்குச் செல்ல முற்படுவதும், அதற்காகக் காசுகளைத் திருட முற்படுவதும் இயற்கையே. இளைஞனின் உயிரியல், சமூக உள்ளத் தேவைகளைப் பெற்றோர் புரிந்து செயல்படுவதன்மூலம் பல சச்சரவுகளையும், கருத்துவேறுபாடுகளையும் தவிர்க்கலாம்.

**மாற்றுப்பாலாரின் கவர்ச்சி**
**(Attraction of opposite Sexes)**

அடுத்து மாற்றுப் பாலாரின் கவர்ச்சி குறிப்பிடத்தக்க ஒன்ருகும். இதுகாறும் (குழந்தைப் பருவத்தில்) ஆண்கள் பெண்களை வெறுத்தும், பெண்கள் ஆண்களை வெறுத்தும் வந்தனர். இளமைப் பருவத்தில் ஏற்பட்ட உடலியல் மாற்றங்களினுலும், நாளமில்லாச் சுரப்பிகளின் செயல்களாலும் மாற்றுப்பாலரிடம் (Opposite sexes) கவர்ச்சி ஏற்படுகின்றது. அதாவது இளைஞன் பெண்களிடம் பேசுவதிலும் பெண்களைக் கவர்வதிலும் தனிக் கவனம் செலுத்த முற்படுகின்ருன். இவ்வாறு பேச, பழக முற்படும்பொழுது பல்வேறு இடையூறுகள் ஏற்படுகின்றன. பெற்ருேர், ஆசிரியர் ஆகியோரின் கண்டிப்பும், சமூகத்தின் நெறிமுறைகளும் தன் எண்ணத்திற்கும் செயலிற்கும் குறுக்கே நிற்பதை இளைஞன் காண்கிருன். இதனுல், இளைஞனுக்குப் பற்ருர்வம் (Anxiety), விறைப்பு (Tension) போன்ற பல பிரச்சினைகள் உண்டாகின்றன. இப்படிப்பட்ட பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளப் பகற்கனவு காணுதல் என்னும் செயலில் இறங்க முற்படுகிருன். அன்ருட வாழ்க்கையில் அடைய முடியாதவற்றைப் பகற்கனவில் அடைய முற்படுகிருன். தான் பெரிய பணக்காரனுக இருப்பதாகவும், கார் வைத்திருப்பதாகவும், பெண் தோழியர் புடைசூழ இருப்பதாகவும் அல்லது குறிப்பிட்ட தன் மனதிற்கேற்ற பெண் தன்னிடம் நெருங்கி இருப்பதாகவும் பகற்கனவு காணுகிருன். அதாவது, சினிமாக்களில் கனவுக்காட்சி என்கிருேமே அதைப் போன்றதுதான் இப் பகற்கனவுகள். இவைகள் ஓரளவுக்கு மனநிறைவைத் தருகின்றன.

மற்றும் ஒரு வேலையைத் தேர்ந்தெடுத்தல், பொருளாதார விடுதலை, திருமணத்திற்குத் தன்னை ஆயத்தப் படுத்திக் கொள்வது போன்ற பிரச்சினைகளும் இளைஞன் முன் நிற்கின்றன.

இளைஞன் மேற்கூறிய பல்வேறு பிரச்சினைகளுக்கிடையில் சிக்கித் தவிக்கிருன். சுருக்கமாகச் சொன்னுல்

சூறுவளியில் சிக்கிய கப்பல் போன்றது இளைஞனின் நிலைமை. இந்நிலையில் பெற்றோர்களும், ஆசிரியர்களும் தங்களைப் புரிந்துகொள்ளக் கூடாதா என்று இளைஞன் ஏங்குகிறான். இளைஞர்கள் மூத்தோர்களைப்போல் நடக்க முற்பட்டால் 'என்னடா, அதற்குள் பெரிய மனிதன் ஆகிவிட்டாயா' என்று கேட்கிறோம். இதற்கு அஞ்சி பொறுப்புக்கள் எதையும் மேற்கொள்ளாமல், குழந்தைகளைப்போல் நடக்க முற்பட்டால், ''என்ன, இன்னும் குழந்தையா?'' என்று கேட்க முற்படுகிறோம். இஃது இளைஞனுக்கு உளப் போராட்டத்தை உண்டாக்குகின்றது.

பூப்படைதல், உடல் மாற்றங்கள், பால்கவர்ச்சி, சமூகக் கட்டுக்கோப்புகள், மனவெழுச்சி, விடுதலை, வேலை தேடுதல், திருமணத்திற்கு ஆயத்தஞ் செய்தல், தனக்கென ஒரு வாழ்க்கைத் தத்துவத்தை அமைத்துக் கொள்ளுதல் போன்ற இன்னோரன்ன பிரச்சினைகளில் சிக்கித் தவிக்கிறான் இன்றைய இளைஞன்.

தன்னை ஒருவரும் புரிந்துகொள்ளவில்லையே என்று ஏங்குகிறான். ஆசிரியனும் சரி, பெற்றோர் ஆயினும் சரி, சமூகமும் சரி இளைஞன்மேல் சினங்கொள்கிறார்களே தவிரப் புரிந்து கொள்வதாகத் தெரியவில்லை. இப்படிப் புரிந்து கொள்ளாத நிலையில் அவன் கலகக்காரனாக (Rebellion) நடக்க முற்படுகிறான். இளைஞர்களைப் புரிந்து செயல்படுவதன்மூலம் இன்று நம் இல்லங்களிலும், பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் காணப்படும் எண்ணிறந்த பிரச்சினைகளைத் தவிர்க்க முடியும் என்பது எம்போன்றோர் கருத்து.

இளைஞர்களுடைய ஆற்றல்களை ஆக்கப்பணியில் செலவிட நாம் வழிவகுத்துத் தரவேண்டும். இதற்கு நல்ல விளையாட்டுக்களங்கள், நீச்சல் குளங்கள், பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் ஆகியவை நிறையத்தேவை. சமூகமும், அரசும், இளைஞர்களைப் புரிந்து, இளைஞர்களின் ஆற்றலை ஆக்கப் பணியில் செலவிட வழிவகைகள் செய்தால் இந்தியா ஒரு வளம் நிறைந்த நாடாகும்.

## 2

# இளம்பருவக் குற்றங்கள்

பதினெட்டு வயதிற்குட்பட்ட சிறுவர் சிறுமியர் சமூகத்திற்குப் புறம்பான செயல்களைச் செய்யும்போது அவர்களை இளம்பருவக் குற்றவாளிகள் என்று சொல்லு கிறோம். அவர்களுக்கென்று தனிச்சட்டம் (Tamilnadu Children Act) உள்ளது. பண்டைக் காலத்தில் சிறியவனாயினும், பெரியவனாயினும் குற்றத்திற்குத் தகுந்த தண்டனை அளித்து வந்தார்கள். தற்காலத்தில் ஏற்பட்ட சமூக அறிவியல் புரட்சியின் காரணமாகச் சிறுவர், சிறுமியர் செய்யும் குற்றங்களை அணுகும் முறையிலும், முதிர்ந்தவர்கள் புரிந்த குற்றத்தை அணுகும் முறையிலும் பெருத்தவேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. சிறுவர்களைப் பொறுத்தவரை தண்டிப்பதை விடத் திருத்துவதே நம் நோக்கமாக உள்ளது.

### இளம்பருவக் குற்றங்கள்

ஊர் சுற்றுதல், திருடுதல், தொடர்ந்து பள்ளிக்குச் செல்லாதிருத்தல், ஆக்கிரமிப்பு நடத்தை, மதுபானங்கள் விற்றல், பிச்சை எடுத்தல் ஆகிய அனைத்தும் இளம்பருவக் குற்றங்கள் என்ற பிரிவில் அடங்கும். மற்றும் கொலை, கற்பழிப்பு ஆகிய கொடிய செயல்களும் இதனுள் அடங்கும். பொதுவாகப் பெண் இளங் குற்றவாளிகளின் எண்ணிக்கை

ஆண் இளங்குற்றவாளிகளின் எண்ணிக்கையைவிடக் குறைவே யாகும். பெண்களைப் பொறுத்தவரை பால் குற்றங்கள் (Sex offences), வீட்டைவிட்டு வெளியே ஓடிவிடுதல், அடங்காப் பிடாரியாய் இருத்தல், திருடுதல் ஆகிய செயல்களே மிகையாகக் காணப்படுகின்றன.

இந்தியா போன்று வளர்ந்துவரும் நாடுகளில் இளம் பருவக் குற்றங்கள் வெகுவாக அதிகரிப்பது இயற்கையே. குறிப்பாக, நகரங்களில் இவர்கள் தொல்லைகள் நாளுக்குநாள் அதிகரித்து வருகின்றன. எனவே இப் பிரச்சினையில் நாம் சிறிது அக்கறை காட்ட வேண்டிய நிலையில் உள்ளோம்.

**இளம்பருவக் குற்றங்களின் காரணங்கள்**

இளம்பருவக் குற்றங்களின் காரணங்கள் யாவை என்பதை ஈண்டுக் காண்போம். பொதுவாக, இளம் பருவக் குற்றங்களுக்கு இருவகையான காரணிகள் உண்டு: 1. சூழ்நிலைக் காரணிகள், 2. உளவியல் காரணிகள்.

**1. சூழ்நிலைக் காரணிகள்**

தாழ்ந்த சமூகப் பொருளாதார நிலை, குடிசைப் பகுதிகளில் வசித்தல், குடும்பச் சீரழிவுகள் ஆகியவை இன்றியமையாத காரணிகளாகும். தாழ்ந்த சமூகப் பொருளாதார நிலைக்கும் இளம்பருவக் குற்றங்களின் எண்ணிக்கைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகப் பல்வேறு ஆய்வுகள் காட்டியுள்ளன. சுருக்கமாகச் சொன்னால் வறுமை ஒரு முதன்மையான காரணமாக அமைந்துள்ளது.

குடும்பச் சீரழிவுகள் இளம்பருவக் குற்றங்களுக்கு ஒரு காரணமாக அமைகின்றன. அதாவது, கணவன் மனைவிக்குள் அடிக்கடி சண்டை சச்சரவுகள் ஏற்படுதல், மணவிலக்கு, குழந்தை தாயை அல்லது தந்தையைப் பிரிந்து இருத்தல், அல்லது பெற்றோர் இருவரும் இல்லாத சூழ்நிலையில் குழந்தை வளர்தல், பெற்றோர் மிகையாகத் தண்டித்தல் போன்ற காரணிகளும் குற்ற நடத்தைக்குக் காரணமாக

அமைகின்றன. குழந்தையின் நடத்தையை நிர்ணயிப்பதில் பெற்றோரின் பங்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதை ஒரே ஒரு கருத்தின்மூலம் காணலாம்.

**2. உளவியல் காரணிகள்**

மனித நடத்தையில் முன்னோடி (Modelling) பெரும் பங்கு கொள்வதாக உளவியலார் கண்டுள்ளனர். குழந்தை வளரும்போது அது யாராவது ஒருவரை முன்னோடியாக (Model) வைத்துத் தன் ஆளுமையை உருவாக்கு கிறது. ஆரம்பக் காலங்களில் சிறுவன் தந்தையை முன்னோடி யாகக் கொள்கிறான். சிறுமி தாயை முன்னோடியாகக் கொள்கிறாள். இவ்வாறு வளரும் காலத்தில் யாரை முன்னோடியாகக் கொள்கிறார்களோ அவர்களின் நடத்தையை அப்படியே மேற்கொள்ள முற்படுகின்றார்கள். பிறகு வீட்டில் அண்ணன் அக்கா ஆகியோரையும் முன்னோடியாகக் கொள் வார்கள். வெளியுலகத் தொடர்பு அதிகமானவுடன் திரைப் பட நட்சத்திரங்களை முன்னோடியாகக் கொள்வதையும், அரசியல் தலைவர்களை முன்னோடியாகக் கொள்வதையும் தேசியத் தலைவர்களை முன்னோடியாகக் கொள்வதையும் நாம் காணலாம். ஒரு குறிப்பிட்ட நடிகரை முன்னோடியாகக் கொள்ளும் ஒருவன் அவனுடைய நடை, உடை, பாவனை, பேச்சு அத்துணைச் செயல்களிலும் தன் முன்னோடியைப் போலவே நடக்க முற்படுகின்றான். இம்மாதிரி இருவேறு நடிகர்களை முன்னோடிகளாகக் கொண்ட இருவேறு குழுக்கள் தங்களுக்குள் அடித்துக் கொள்வதையும் கொலை முதலான கொடிய செயல்களில் ஈடுபடுவதையும் நாம் பார்த்தும், கேட்டும் இருக்கிறோம். எனவே, குழந்தைக்கு வீட்டில் நல்ல முன்னோடி இல்லாவிட்டாலும் - தீய முன்னோடியைப் பின்பற்ற ஆரம்பித்தாலும் அவனுடைய ஆளுமை பாதிக்கப்படுகிறது. இளம்பருவக் குற்றங்களில் அவன் ஈடுபடவும் இவை அடிப்படையாக அமையலாம்.

இதனால்தான் குழந்தைகளின் முன்பு நாம் தீய செயல்கள் ஒன்றையும் செய்யக்கூடாது. நாம் சிகரெட்டு பிடிப் பதைப் பார்க்கும் குழந்தை காகிதத்தைச் சுருட்டிச்

சிகரெட்டு பிடிக்க முற்படுகிறது. நாம் குளிரூட்டுப் பெட்டி களில் இருந்து மதுபானம் எடுப்பதைப் பார்க்குங் குழந்தை நாளடைவில் நமக்குத் தெரியாமல் சுவைக்கத் தொடங்கு கிறது. நாம் பொய் பேசுவதைக் கவனிக்கும் குழந்தை தானும் பொய் பேசுகிறது. நாம் நல்லவைகளைச் செய்யும்போது குழந்தையும் நல்ல செயல்களைச் செய்கிறது. குற்றங்களைத் தூண்டுவதில் பெற்றோரின் பங்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதை இக்கொள்கை நன்கு விளக்கும்.

சிறுமியர் பால் குற்றங்களில் ஈடுபடுவதற்கும் (Sex offences), வீட்டைவிட்டு வெளியே ஓட முற்படுவதற்கும் ஓரள விற்குப் பெற்றோரே காரணமாக அமைகின்றனர். வீட்டில் அன்பு செலுத்துபவர் யாரும் இல்லாதபோது சிறுமியர் வெளியில் ஓட முற்படுகின்றனர். இந்த நேரத்தில் யாராவது அன்பு செலுத்த முற்பட்டால், அது யாராயினும் சரி, அவர்கள்பால் தங்கள் உள்ளத்தையே கொடுத்துவிட முற்படு கின்றனர். கொடி படரும்போது அருகில் எது உள்ளதோ அதை ஒட்டிப் படருவதைப் போலாகும்.

தாய் தந்தையரின் வெறுப்புக்கும், அடி உதைக்கும் தொடர்ந்து ஆளாகும் சிறுவர்கள் குற்றங்களில் ஈடுபட முற்படுகின்றார்கள் என்றும் ஆய்வுகள் காட்டுகின்றன.

**ஒப்பார் குழுக்கள்**

இளம் பருவக் குற்றங்களைத் தூண்டுவதில் குழுக்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. பதின் வயதினர் (Teen agers) குழுச் செயல்களில் (Group activities) மிகையாக ஈடுபடுகின் றார்கள். பெரும்பாலான நேரத்தைக் குழுக்களில் செலவிடு கிறார்கள். குழுக்களுக்காக எதையும் செய்ய முற்படுகிறார்கள். எனவே அவர்கள் உறுப்பினராயுள்ள குழுக்களின் தன்மை யைப் பொறுத்து அவர்களின் நடத்தை அமைகிறது. நகர்ப் புறங்களில் சில பகுதிகள் எப்போதுமே குற்றம் நிறைந்து காணப்படுவதற்குக் காரணம் இம்மாதிரியான குழுக்கள் மிகுதியாக இருப்பதேயாகும். 70 முதல் 90 விழுக்காடு இளம்

பருவக் குற்றங்கள் இருவர் அல்லது இரண்டுக்கும் மேற்பட்டோர் சேர்ந்து செய்வதாகவே உள்ளன. இம்மாதிரி குழுக்களில் உறுப்பினராக இருப்பதால் அவருக்கு ஒரு காப்புணர்வும் (Security feelings), மதிப்பும், மரியாதையும் (Recognition and respect) கிடைக்கின்றன. சிலருக்கு வீட்டிலோ சமூகத்திலோ இவைகள் கிடைப்பதில்லை.

பல்வேறு ஆராய்ச்சிகளின் பயனுக இளம்பருவக் குற்றவாளிகளேக் கீழ்க்காணும் அடிப்படையில் பிரித்துள்ளார்கள்.

1. **பொருள் தொடர்பான குற்றம் புரிபவர்கள் :**

   திருட்டு, மதுபானங்கள், கஞ்சா, அபினி போன்றவற்றைக் கடத்தல் மற்றும் பொருள் சேகரித்தல் இதனுள் அடங்கும்.

2. **வெறிச்செயல்கள் அல்லது வன்முறைகளில் ஈடுபடுபவர்கள் :**

   ஆக்கிரமிப்பு, அடி, உதை, கொலே, தீவைத்தல், பொருட்களே அழித்தல் போன்றவை இதனுள் அடங்கும்.

3. **பால் குற்றங்கள் :**

   கற்பழித்தல் முதலியன.

பொதுவாக, இளம்பருவக் குற்றவாளிகள் என்ற தனிப் பிரிவினர் (Delinquent Personalities) இல்லே என்றே சொல்லலாம். எல்லோருமே தீய சூழ்நிலேகட்கு ஆளாகிக் குற்றவாளிகளாகின்றனர் என்றுதான் உளவியலார் கூறுகின்றனர். எனவே, சிறுவர் சிறுமியர்களுக்கு நல்லதொரு சூழ்நிலேயை உண்டாக்குவதன் மூலமும், அவர்கள் ஆற்றலே நல்ல வழியில் செலவிட வகை செய்வதன் மூலமும் இன்னேரன்ன சமூகத் தீமைகளேக் களேயலாம்.

அடைபட்ட ஒரு இளம் பெண் குற்றவாளி எழுதிய பாட்டு ஒன்றைக் காணலாம். இளம் குற்றவாளிகள் தங்களைப் பற்றி எப்படி நினைக்கிறார்கள் என்பதையும், உலகைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதையும் இப்பாடல் மூலம் அறியலாம்.

I live in a house called torture and Pain
It's made of materials called Sorrow and Shame
It's a lovely place in which to dwell
There's a horrid room there and they call it hell
From the fancets run ters that I've cried all these years
And it's heated by my heart made of Stone
But the Worst Part to face is
I'll die in this place
And when I die I'll die all alone.

இளம்பருவக் குற்றத்திற்கு நாமும், சமூகமும் ஓரளவு பொறுப்பாக உள்ள நேரத்தில் அவர்களுக்கு இரக்கங்காட்டி அவர்களைத் திருத்த முற்பட வேண்டும். அவர்களின் மறு வாழ்வுக்கு ஆவன செய்வதே நம் கடமையாக இருக்க வேண்டும்.



# 3

# வளர்ச்சிக்குரிய பணிகள்

ஒவ்வொரு சமூகத்திலும், ஒரு குறிப்பிட்ட வயதில், ஒருவர் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதுபற்றிய தெளிவான கருத்து நிலவி வருகிறது. சமூகம் அவர்களிடம் ஒரு குறிப்பிட்ட நடத்தையை எதிர்பார்க்கிறது; அதை யறிந்து, புலமை பெற்ற பலர் சமூகத்தினரால் போற்றப் படுகிறார்கள்; அதை அறியாதவர்கள் பல்வேறு நடத்தைப் பிரச்சினைகளுக்கும், மனவெழுச்சிப் பிரச்சினைகளுக்கும், ஆளாகித் துன்பப்படுகிறார்கள்.

ஹேவி கர்ஸ்ட் (Havighurst) என்பவர் வளர்ச்சிக்குரிய பணிகளைப் பற்றித் தெளிவாக விளக்குகிறார். அவருடைய நீண்டநாள் ஆராய்ச்சியின் பயனாக ஒவ்வொரு பருவத்திலும் உள்ள வளர்ச்சிக்குரிய பணிகளை வரிசைப்படுத்திக் கூறியுள்ளார். குழந்தைப் பருவத்திற்கும், இளமைப் பருவத்திற்கும் உரிய வளர்ச்சிக்குரிய பணிகளைச் சுருக்கமாகக் காண்போம்.

குழந்தைகளுடைய வளர்ச்சிக்குரிய பணிகள்

1. விளையாட்டிற்குத் தேவையான உடல் திறன்களை வளர்த்துக் கொள்ளுதல்.

2. தன்னைப்பற்றிய ஒரு நல்ல மனப்பாங்கை (Positive Attitude towards one's own self) வளர்த்துக் கொள்ளுதல்.

3. ஒத்த வயதினருடன் பழகத் தெரிந்து கொள்ளுதல்.

4. படிக்க, எழுத, கணக்கிடத் தேவையான அடிப் படைத் திறன்களை வளர்த்துக் கொள்ளுதல்.

5. மனச்சாட்சி, நீதிநெறிமுறைகள், பயன் மதிப்புக்கள் (Values) ஆகியவைகளை வளர்த்துக் கொள்ளுதல்.

6. சமூகக் குழுக்கள் பற்றியும், நிறுவனங்கள் பற்றியும் ஒரு மனப்பாங்கை வளர்த்துக் கொள்ளுதல்.

இளைஞர்களது வளர்ச்சிக்குரிய பணிகள்

1. ஒருவரது உடலினை ஏற்றுக்கொண்டு, அதனைச் சிறப் பாகப் பயன்படுத்துதல்.

2. மாற்றுப் பாலாருடன் முதிர்ச்சியுள்ள, திருப்தி யளிக்கும் தொடர்புகளை அடைதல்.

3. முதியோரிடமிருந்து மனவெழுச்சிச் சுதந்திரத்தையும் (Emotional independence), பொருளாதாரச் சுதந்திரத் தையும் (Economic independence) பெறுதல்.

4. வாழ்க்கைப் போட்டிக்குத் தேவையான அறிவுத்திறன் களையும் கருத்துக்களையும் வளர்த்துக்கொள்ளுதல்.

5. ஒரு தொழிலினைத் தேர்ந்தெடுக்க ஆயத்தமாதல். திருமணத்துக்கும், குடும்ப வாழ்வுக்கும் தன்னை ஆயத்தம் செய்து கொள்ளுதல்.

6. நடத்தையின் வழிகாட்டியாகப் பயன் மதிப்புக்களைச் சேகரித்துப் பயன்படுத்தல்.

ஒருவன் மேற்கூறிய வளர்ச்சிக்குரிய பணிகளைச் செவ்வனே புரிந்து செயல்பட, ஆசிரியரும், பெற்றோரும், பலவகையிலும் அவனுக்கு உதவ வேண்டும். இவ்வாறு அறிந்து, புரிந்து செயல்பட்டால், அவன் பிற்காலத்தில் மகிழ்ச்சியாகவும், வெற்றிகரமாகவும் வாழ ஏதுவாக அமையும்.

**வளர்ச்சிக்குரிய பணிகளின் இரு நன்மைகள்:**

1. வளர்ச்சிக்குரிய பணிகள் தனியனுக்கும், பெற்றோருக்கும், ஆசிரியருக்கும் ஒரு வழிகாட்டி (guide) யாக அமைகிறது.

2. எதிர்காலத்தில் தனியன் எப்படி நடந்துகொள்ள வேண்டும், சமூகம் அவனிடம் என்ன எதிர்பார்க்கிறது என்பதைத் தெளிவாக விளக்குகிறது.

ஒரு தனியன் இவ்வளர்ச்சிக்குரிய பணிகளை வெற்றிகரமாக அடைவதன் மூலம், சிறப்பான எதிர்காலத்தை அமைத்துக் கொள்கிறான். எனவே, சமூகமும், பெற்றோரும், ஆசிரியர்களும் இதையுணர்ந்து செயல்படுவதன்மூலம் மிகச்சிறப்பான ஒரு சமுதாயத்தை அமைக்கலாம்.



# 4

# ஆக்கத்திறனை வளர்ப்பதன் இன்றியமையாமை

## ஆக்கத்திறன் (Creativity)

இன்று நம் சமுதாயத்தில் குறிப்பாக இளைஞர்களிடையே ஆக்கத்திறனை வளர்க்க வேண்டிய ஒரு சமூகத்தேவை ஏற்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் ஆக்கத்திறன் பற்றியும் ஆக்கத்திறனை வளர்ப்பது பற்றியும் நாம் சிறிது ஆராயவேண்டிய நிலையில் உள்ளோம்.

இன்றைய கல்வியில் ஆக்கத்திறன் வளரும்படியான சூழ்நிலை அவ்வளவாக இல்லை. இன்றைய கல்வியில் குறிப்பாக, அடிப்படைக் கல்வியில் ஆக்கத்திறனை வளர்க்க வேண்டிய ஒரு கட்டாயம் ஏற்பட்டுள்ளது. ஆக்கத்திறன், ஆக்கச் சிந்தனையின் (Creative Thinking) பாற்பட்டது. ஆக்கச் சிந்தனை என்பது ஒரு பிரச்சினையை ஒரு குறிப்பிட்ட பாணியிலேயே அணுகாது, சூழ்நிலைக்கேற்ற புது முறைகளால், புதுக் கருத்துக்களைக் கொண்டு தீர்ப்பதாகும். இத்தகைய ஆக்கத்திறன் தானுகத் தான் வளருமே தவிர, கட்டாயத்தால் வளராது; வளர்க்கவும் முடியாது. ஆனுல் ஆக்கத்திறன் வளர்வதற்கான நல்லதொரு சூழ்நிலையை அமைத்துத் தருவது, ஆசிரியர்கள், பெற்ருேரின் பொறுப்பாகும். சான்ருக, ஒரு விவசாயி விதை முளைத்துச் சிறப்பாக வளர நல்லதோர் சூழ்நிலையை

அமைத்துத் தரலாம் (எருவிடல், நீர் பாய்ச்சுதல் முதலியன). ஆனல் நேரடியாக அவரால் ஒன்றும் செய்ய முடியாது. ஆக்கத் திறன் வளர்ச்சியும் அதைப் போலத்தான்.

ஆக்கத்திறனை வளர்ப்பது பற்றிப் பல்வேறு ஆய்வுகள் நடந்து வருகின்றன. இருப்பினும், இத்துறையில் பெரியதொரு முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டதாகச் சொல்ல முடியாது. ஆனல் அதே நேரத்தில் இதன் இன்றியமையாமையை அனைவரும் உணரத் தொடங்கிவிட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆக்கத் திறனை வளர்ப்பதெப்படி என்று அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியாது. இருப்பினும் ஆக்கத்திறன் வளர்வதற்கான சூழ்நிலைகள் பற்றிச் சுருக்கமாகக் காண்போம்.

**அனுபவம் பெறத் திறந்த மனம்**
**(Openness to Experience)**

ஆக்கத்திறன் வளர ஒருவருக்குத் திறந்த மனது தேவை. திறந்த மனது என்பது மூடிய மனத்தின் (Closed mind) எதிர்மறை. அதாவது நாம் முன்கூட்டியே (Predetermined) முடிவு செய்வதை விட்டுவிட்டு, (மரங்கள் எல்லாம் பச்சை நிறமுடையவை, பெண்கள் கல்லூரியில் சேர்வதே தவறு, நவீன ஓவியம் (Modern Art) அனைத்தும் மோசமானவை என்ற முடிவோடு நோக்குவதனை விட்டுவிட்டு); ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அதற்கு என்ன பொருள் என்று பார்த்து அதன்படி நம் நடத்தையை அமைத்தல். (இந்த மரம் மஞ்சளாக உள்ளது; இந்தக் கல்லூரியில் பெண்கள் சேர்வது சரியல்ல; இந்த நவீன ஓவியம் எனக்குப் பிடிக்கவில்லை) என்ற வகையில் மன இயல்பு அமையவேண்டும். அதாவது இந்த நிலையில் உள்ள ஒருவன் எல்லா மரங்களுமே பச்சை, எல்லா மாணவர்களுமே மோசமானவர்கள், கல்லூரிப் படிப்பே மோசமானது என்று நினைப்பதில்லை. இவ்வரைப் பொறுத்தவரை ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் அது எப்படி என்றுதான் காண்கிறார். தன் மனதுக்கேற்றபடி புலன் காட்சி செய்வதில்லை. இந்த நிலையில் ஒவ்வொரு தூண்டலும் அவருக்குப் புதியதாகவே இருக்கும். இந் நிலையில் ஆக்கத்திறன் வளர ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படுகிறது.

## அகமைய மதிப்பீடு
(An Internal locus of Evaluation)

அதாவது பிறர், நம்மைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்பது பற்றியே கவலைப்பட்டு, பிறருக்காக வாழ்வதைவிட நாம் நமக்குத் திருப்தியளிக்கும் வகையில் வாழ்கிறோமா என்று எண்ணிப் பார்த்தல்தான் அகத்தினை மையமாக வைத்துத் தன்னை மதிப்பீடு செய்துகொள்ளும் அகமைய மதிப்பீடு ஆகும். ஆக்கத்திறன் படைத்தவர்கள் பிறர் புகழ் வார்த்தைகளுக்காக ஏங்குவதில்லை. அவர்களுக்கு எது சரியோ அதன்படி செய்வதில்தான் திருப்தி கொள்வார்கள். இதனால் பிறர் தம்மைப் பற்றித் தவறாக நினைப்பார்கள் என்றெல்லாம் கவலைப்படமாட்டார்கள். இவர்களைப் பொறுத்த வரை அந்தச் செயல் அவர்களுக்குத் திருப்தி அளித்ததா என்பதுதான் பிரச்சினை. எனவே, நமக்குள்ளாகவே நம்மீது நாம் கொள்ளும் மதிப்பீடு ஆக்கத்திறன் வளர்ச்சிக்கு ஒரு அடிப்படையாகும்.

## ஆக்கத்திறனை வளர்ப்பதெப்படி?

குழந்தைகளிடையே ஆக்கத்திறன் வளர, உளப் பாதுகாப்பும் (Psychological Security) சிந்தனைச் சுதந்திரமும், (Psychological Freedom) மிக முக்கியமான காரணங்களாகும். இதைக் கீழ்க்காணும் நான்கு வகையான செயல்களின் மூலம் நிலை நிறுத்தலாம்.

### 1) நிபந்தனையற்ற ஏற்பு
(Unconditional Acceptance)

ஆசிரியரோ அல்லது பெற்றோரோ, ஒரு குழந்தையை அந்தக் குழந்தையாகவே ஏற்றுக்கொள்ள வேண்டும். இதற்கு அடிப்படையாக அமைவது நிபந்தனையற்ற நம்பிக்கை (Unconditional Faith) ஆகும்.

இந்நிலையில் ஒரு குழந்தை சுதந்திரமாகச் சிந்திக்க முற்படுகிறது. ஒரு புதுக்கருத்துத் தோன்றும்போது அதைப் பெற்றோரோ அல்லது ஆசிரியரோ அவமதித்துவிடுவார்கள் என்ற பயம் எழுவதில்லை. எனவே இந்நிலை ஆக்கச் சிந்தனை ஏற்பட ஏதுவாக இருக்கிறது.

## 2) வெளி மதிப்பீட்டினைக் குறைத்தல்
## (Reducing the External Evaluation)

நாம் நம்மை அடிப்படையாகக் கொண்டு பிறரை மதிப்பிடுவதை நிறுத்துவதன் மூலமாக ஆக்கத்திறனை வளர்க்கலாம். மதிப்பீடு ஒருவனுக்கு எப்போதும் பயத்தைக் கொடுக்கிறது. சான்றாக, வகுப்பறையை எடுத்துக் கொள்வோம். ஆசிரியர் கேள்வி கேட்கும்போதோ அல்லது விவாதத்தின் (Discussion) போதோ பல மாணவர்கள் மனதுக்குள்ளேயே விடை பகர முற்படுகின்றனர். எழுந்து பேசுவதில்லை; காரணம் விடை தெரியாமல் அல்ல. தங்கள் விடையை, மொழியை அல்லது பேசும் பாணியை ஆசிரியரும் மற்ற மாணவர்களும் எங்குக் குறைவாக மதிப்பிட்டுவிடுவார்களோ (evaluate); எங்குச் சிறப்பாக அமையாமல் போய்விடுமோ என்ற பயத்தால். மாறாக எதை வேண்டுமானாலும் சொல்லலாம்; தவறாயினும் அதை ஆசிரியர் ஏற்றுக்கொண்டு திருத்த முற்படுவார்; என்னை மோசமானவன் என்று சொல்லமாட்டார்; பிறமாணவர்கள் சிரிக்க மாட்டார்கள் என்ற நிலை இருந்தால், நிறைய மாணவர்கள் விவாதங்களில் பங்கு கொள்ளும் நிலை ஏற்படும். மற்றும் தங்கள் மனத்துக்குப் பட்டதை அப்படியே சொல்வார்கள். இங்கு மதிப்பீட்டிற்கும் (Evaluation) எதிர்வினைக்கும் (Reaction) உள்ள வேறுபாட்டை நாம் ஆராய வேண்டும். சான்றாக, 'உன்னுடைய செயல் எனக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்வதற்கும், 'நீ செய்வது சுத்த மோசம்' (Bad) என்று சொல்வதற்கும்' நிறைய வேறுபாடு உள்ளது. முதலில் சொன்னது எதிர்வினை; இரண்டாவது மதிப்பீடு. முதலில் ஏற்பட்ட எதிர்வினையால், ஒருவனின் தனித்தன்மை பாதிக்கப்படுவதில்லை. அவனுடைய செயலை அல்லது கருத்தை மாத்திரம்தான் குறை கூறுகிறோம். ஆனால் மதிப்பிடும்போது தனியனையே குறைகூற முற்படுகிறோம். இது ஆக்கத்திறன் வளர்ச்சியைப் பாதிக்கிறது. எனவே, பெற்றோரும் ஆசிரியர்களும் இதை உணர்ந்து செயல்படல் வேண்டற்பாலது.

### 3) ஒத்துணர்ந்து புரிந்துகொள்தல்
### (Empathic Understanding)

உளப் பாதுகாப்பு இதன் மூலம்தான் ஏற்படுகிறது. 'நான் உங்களை ஏற்றுக்கொள்கிறேன்' (I accept you) என்று சொல்வதாக வைத்துக் கொள்ளுங்கள். உங்களைப்பற்றி ஒன்றும் தெரியாமல் நான் இதைச் சொன்னுல், உங்களைப்பற்றி நான் நன்கு தெரிந்து கொள்ளும்போது என் கருத்தில் மாற்றம் ஏற்படும். இந்நிலை ஆக்கத்திறன் வளர்ச்சியைப் பாதிக்கும். மாருக நான் 'உங்களை நன்கு புரிந்து உங்கள் செயலையும் பிரச்சினைகளையும் உங்களுடைய மனக்கண் மூலமாகவே பார்க்கும் போது (அதாவது அச்செயல் உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது என்பதை நான் உணர்ந்து செயல்படும்போது) உண்மையிலேயே உங்களுக்கு ஒரு உளப் பாதுகாப்புக் கிட்டுகிறது. அதாவ்து நான் உங்களை முழுவதும் புரிந்து கொண்டதாக உண்மையாகவே எண்ணுகிறீர்கள். இந்நிலையில் உங்கள் உள்ளத்தை, சிந்தனையை, கருத்தை அப்படியே எந்த மாற்றமும் இன்றிப் பிரதிபலிக்கிறீர்கள். அங்கே ஆக்கத்திறனைக் காணலாம். இத்திறனைப் பெற்ருேரும் ஆசிரியர்களும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

### 4) உளச் சுதந்திரம்
### (Psychological Freedom)

தனியனிடம் புதுக்கருத்துக்களை வளர்க்கும் பணியில் நாம் ஈடுபடவேண்டும். அதாவது எதையும் பழமையின் அடிப்படையில் செய்யாமல் (precedence) புதிய முறையில் செய்யத் தூண்டவேண்டும். இங்கு சில பொறுப்புக்களையும் குழந்தைகள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதாவது வெற்றியின்போது கிடைக்கும் மகிழ்ச்சி, தோல்வியில் ஏற்படும் மனமுறிவு ஆகிய இரண்டையும் ஒரே மாதிரி அனுபவிக்கும் ஒரு மனப்பாங்கை நாம் உண்டாக்கித்தர வேண்டும். நாம் பெரும்பாலும் பொறுப்புக்களைச் சிறுவர் சிறுமியரிடம் தருவதில்லை. இந்நிலை மாறவேண்டும்.

ஆக்கத்திறனை வளர்ப்பது பற்றிய சில அடிப்படைக் கருத்துக்களை இங்கே கண்டோம். இத்துறையில் இன்னும் நிறைய ஆய்வுகள் தேவைப்படுகின்றன. ஆக்கத்திறனை குழந்தைகளிடம், ஏன் நம் அனைவரிடமுமே வளர்க்க வேண்டும் என்று கூறுவதன் அடிப்படை யாதெனில் அறிவியல்கள் பல்வேறு துறைகளில் விரைவாக முன்னேறி வருகிறது. அதனால் எதிர்காலச் சமுதாயம் பல்வேறு சவால்களைச் சமாளிக்க வேண்டிய நிலையில் உள்ளது. எனவே, மாறி வரும் சமுதாயத்தில் நம் சந்ததியினர் சிறப்பாக வாழவேண்டுமானால் அவர்கள் தங்களைத் தக அமைத்துக்கொள்ள வேண்டும். இம்மாதிரியான ஒரு தக அமைப்பு நடத்தைக்கு அடிப்படை ஆக்கத்திறனேயாகும். ஆக்கத்திறனை வளர்ப்பதன் மூலம்தான் எதிர் காலத்தில் ஏற்படவிருக்கும் எண்ணற்ற பிரச்சினைகளைச் சமாளிக்க இயலும். எனவே இத்திறனை வளர்ப்பது நம் தலையாய கடமை ஆகும்.






